# மங்கை

ஜனவரி, 92

☆ இசை, நடனக்கலை உலகில்
பிறவி மேதைகள்

☆ பொங்கல்விழா - சிறப்புக் கட்டுரைகள்

☆ திருப்போரூர் முருகன்
அருள்வலம்-(வண்ணப்படமுடன்)

☆ பாவையர்க்கு இருபாவை

☆ ஓர் ஐ.ஏ.எஸ். அதிகாரியின் மனைவி
தமிழிசை மாணவி!

---

கவிதை, கட்டுரைகள், தொடர்கதைகள்
மற்றும் வழக்கமான பகுதிகள்...

விலை ரூ. 6/-




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## புதிய உலக அமைப்பு

மேலும் ஒரு புத்தாண்டு பிறந்து விட்டது. கடந்த சில மாதங்களாகப் பலரும் கூறிவரும் புதிய உலகை அமைக்க ஒரு அரிய வாய்ப்பு கிடைத்து விட்டது.

இதுபற்றி அமெரிக்க ஜனாதிபதி ஜார்ஜ் புஷ் வளை குடாப் போர் முடிந்ததும் முதலில் பேசலானார். அவர் அதன் முக்கிய அம்சங்களை விரிவாகக் கூறாது போயினும் உலகின் அரசியல் அமைப்பில் பெரும் மாற்றங்களைக் காண அவர் நினைக்கிறார் என்பதை அவரது பேச்சிலிருந்து ஊகிக்க முடிகிறது.

சற்று கடந்த ஓராண்டில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை எண்ணிப் பார்த்தால் உலகில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏற்பட்டு வருவதைக் காணலாம். பலச் சிறுநாடுகள் ஒன்று சேர்ந்து இருந்த மாபெரும் சோவியத் ரஷ்யா யுகோஸ்லாவியா போன்றவை பிளவுபட்டன. சிறிய நாடுகள் விடுதலை பெற்று சுதந்திர நாடுகளாயின. வல்லரசுகள் தம் படைபலத்தைக் குறைத்துக் கொள்ள முடிவு செய்ததால் உலகில் பூரண அமைதி நிலவ வாய்ப்பு ஏற்பட்டது.

புதிய உலக அமைப்பு பற்றி முன்னாள் இந்திய அரசாங்க தூதர் டாக்டர் இந்து பிரகாஷ்சிங் கூட்டுறவு காமன் வெல்த் வாயிலாக ஆப்ரகாம் லிங்கனின் அரசியல் நோக்கையும், லெனினின் பொருளாதாரத் தத்துவத்தையும், தார்மீக சித்தாந்தமாக காந்திஜீயின் கொள்கையையும் கடைப்பிடித்து அமல்படுத்த முயல வேண்டும் என்கிறார். இது முற்றிலும் புதியதோர் கருத்து. சிந்திக்கத்தக்கதே.

'அம்புலிமாமா' தன் வாசகர்களுக்குத் தன் புத்தாண்டு வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறது.

மதிமுகம்: 90 ஜனவரி 1992 புன்னகை: 1

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00






# வீராங்கனைக்கு அமைதிக்கான நோபல் பரிசு

இந்த ஆண்டு அமைதிக்கான நோபல் பரிசு மியான்மாரைச் (பர்மா) சேர்ந்த திருமதி. ஆங்க்சான்சூகீக்கு அளிக்கப்பட்டு உள்ளது. இது நமக்கு மிக்க மகிழ்ச்சியை அளிக்கிறது. ஏனெனில் சூகீயின் ஆரம்பப் படிப்பு டில்லியில்தான். அப்போது அவரது தாயார் கின்கி நம்நாட்டில் பர்மாவின் தூதுவராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார்.

ஆங்க்சான் சூகியின் வயது 46. அவர் இரு மக்களின் தாய். உல்கெங்கிலும் ஜனநாயகத்தை நிலைநாட்டவும், மனித உரிமைகளைப் பாதுகாக்கும் போராட்டங்களுக்கும் தனது அமைதியான சாத்வீகப் போராட்டம் வாயிலாக ஆங்க்சான்சூகி மலை போன்ற ஆதரவைத் திரட்டியுள்ளார். தற்போது ஆசியாக் கண்டத்தில் அவர் நடத்திவரும் அமைதியான போராட்டம் இணையற்றது. மிக மிக உயர்ந்தது என்று நோபல் கமிட்டி தன் பாராட்டுப் பத்திரத்தில் இவருக்குப் புகழாரம் சூட்டியுள்ளது. தற்கால பர்மாவின் சிற்பி எனக் கருதப்படும் ஆங்கசெனின் புதல்விதான் ஆங்க்சான் சூகி. பிரிட்டிஷ் ஆட்சியின்போது பர்மா இந்தியாவின் ஒரு பாகமாக இருந்தது. ஆங்க் சென் மக்கள் பே ராட்டத்தை நடத்தி பர்மாவிற்குச் சுதந்திரம் வாங்கிக் கொடுத்தார். ஆனால் சுதந்திரத்திற்குப் பின் 1947 ஜூலை 19ம்தேதி ஆங்க்செனும் அவரது எட்டு சகாக்களும் கொலை செய்யப் பட் ார்கள். அப்போது சூகி இரண்டு வய நுக் குழந்தை.

டில்லியில் கல்லூரிப் படிப்பை முடித்துக் கொண்டு சூகீ ஆக்ஸ் போர்டு பல்கலைக் கழகத்தில் சேர்ந்து அரசியல், பொருளியல் பயின்று அவற்றில் பட்டங்கள் பெற்றார். அதற்குப்பின் லண்டன் பல்கலைக் கழகத்திலும் ஐ. நா சபையிலும் சிறிது காலம் பணிபுரிந்தார். இவர் ஆங்கி லேயர் ஒருவரை மணந்து கொண்ட தால் மீண்டும் இங்கிலாந்திற்கே சென் றார். அதன்பின் ஆராய்ச்சிக்காக நம் நாட்டிற்கு வந்து சிம்லாவிலுள்ள 'இந்தியன் இன்ஸ்டிட்யூட் ஆப் அட் வான்ஸ்டு ஸ்டடீஸில்' சேர்ந்தார். இந்த சமயத்தில்தான் அவர் இரு புத்தகங்களை எழுதினார். ஒன்று அவரது தந்தையின் வரலாறு. மற்றது "லெட் அஸ் விசிட் பர்மா" என்பது.

இதன்பிறகு ஆராய்ச்சிக்காக இவர் மீண்டும் லண்டன் சென்றார். தன் தாய் நோய்வாய்ப்பட்டு மோசமான நிலையில் உள்ளது அறிந்து இவர் ரங்கூனுக்கு விரைந்தார். அப்போது பர்மியர்கள் ஜெனரல் நேவின் ஆட் சியில் அல்லல்பட்டுக் கொண்டிருந் தார்கள். 1988ல் இவர் பர்மாவுக்கு மீண்டும் சென்றதும் மக்கள் இவரது தலைமையில் போராடத் தயாராக இருந்தார்கள். ஆகஸ்ட் 8ந்தேதி மாண வர்கள் நடத்திய போராட்டத்தை ஈவு இரக்கமின்றி பர்மா அரசாங்கம் அடக்கி ஒடுக்கியது.

முப்பது ஆண்டுகளாக ஜனநாய கத்திற்காக நடத்தப்படும் போராட் டம் அடக்கப்படுவது கண்டு சூகீயால் கைகட்டிக் கொண்டு இருக்க முடிய வில்லை. செப்டம்பர் 2-ந்தேதி ஒரு தற்காலிக அரசாங்கம் அமைத்து அதன் மேற்பார்வையில் பொதுத் தேர் தல் நடத்த வேண்டும் எனத் தீர்மா னிக்கப்பட்டது. சூகீ மற்றும் இரு தலைவர்களும் சேர்ந்து 'நேஷனல் லீக் ஆப் டெமாக்ரஸி' என்ற ஜன நாயகமுறைக் கட்சியை நிறுவினார் கள். செப்டம்பர் 24ந்தேதி சூகீ இக் கட்சியின் பொதுச் செயலாளர் ஆனார்.

1989 ஜூலை 19ந்தேதியை தியா கிகள் தினமாகக் கொண்டாடித் தம் தந்தையின் 42வது நினைவு நாளை ஒரு பெரிய ஊர்வலம் நடத்தி இவர் விழா எடுத்தார். மறுநாளே இவரை ஆட்சியாளர்கள் வீட்டுக் காவலில் வைத்தார்கள். ஆயினும் 1990ல் நடந்த பொதுத் தேர்தலில் இவரது கட்சியே மகத் தான வெற்றி பெற் றது.

ஆனால் ஆட்சியாளர்கள் மக்களின் இந்தத் தீர்ப்பை ஏற்கவில்லை. சென்ற ஆண்டில் பர்மாவுக்கு மியான்மார் என்ற பெயர் சூட்டப்பட்டது. பர்மா வில் ஜனநாயக முறை இனிமேல் தான் அமலில் வரவேண்டியுள்ளது.

ஜனநாயகத்திற்காகவும் மனித உரிமைக்காகவும் அமைதி வழியில் ஆங்சான் சூகீ நடத்திவரும் மக்கள் போராட்டத்தை நோபல் பரிசு கமிட்டி பாராட்டி, அவரது வீரதீரச் செயலுக்காக இந்த ஆண்டு அமை திக்கான நோபல் பரிசை அவருக்கு அளித்துள்ளது.




# மந்திரக்காரி மகள்

புலியூரை அடுத்த காட்டில் ஒரு மந்திரக்காரி தன் மகள் மல்லிகா வுடன் வசித்து வந்தாள். மல்லிகா தன் தாயாரை அக்கரையுடன் கவனித்து வந்தாள். அவளுக்கு விவாகம் செய்து வைக்கும் வயதாகி விட்டது.

ஒரு நாள் மாலையில் இருபது வயது இளைஞன் ஒருவன் அந்த மந்திரக்காரி வசிக்கும் குடிசையின் முன் வந்து நின்றான். அப்போது மந்திரக்காரி தன் குடிசை முன் ஒரு கட்டிலைப் போட்டு அதில் உட்கார்ந்திருந்தாள். அவளருகே அவளது மகள் மல்லிகாவும் உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

அந்த இளைஞனைக் கண்ட மந்திரக்காரி தன் கண்களை உருட்டிப் பார்த்தவாறே "அடே! யார் நீ? சற்றும் பயப்படாமல் ஏன் என்னைத் தேடி வந்தாய்?" என்று உறுமினாள். அவனோ நிதானமாக "தாயே! சாக முடிவு செய்தவன் எதற்கு பயப்பட வேண்டும்? நீயோ மந்திரக்காரி. என்னை ஒரு கோழியாக மாற்றிக் கொன்று அறுத்து சமைத்துச் சாப்பிட்டு விடு" என்றான்.

அதைக் கேட்ட மந்திரக்காரி "அடேயப்பா! நீ உன் உயிரைக் கூட மதிக்காமல் போகும்படி அப்படி என்ன கஷ்டம் உனக்கு வந்து விட்டது?" என்று கேட்டாள். அவர்கள் அப்படிப் பேசிக்கொண்டிருக்கும் போது மல்லிகா எழுந்து குடிசைக்குள் போய் ஒரு சொம்பில் குடிக்கத் தண்ணீர் கொண்டு வந்து அந்த இளைஞனிடம் கொடுத்தாள்.

அவனும் அதை வாங்கி 'மடக்' 'மடக்'கென்று குடித்து விட்டு "தாயே! என் பெயர் மாதவன். நான் என் பக்கத்து வீட்டிலுள்ள

—சிவனார் செல்வன்—



பத்மாவைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்புகிறேன். ஆனால் அவளது தந்தை வேறு ஒருவனைத் தேடி கொண்டிருக்கிறார். இன்று மாலையில் நான் அவரைக் கண்டு பத்மாவை எனக்கு மணம் செய்து கொடுக்க வேண்டும் என்றும் அப்படிச் செய்யாவிட்டால் நான் வேறு எந்தப் பெண்ணையும் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன் என்று கூறினேன். அவரோ எரிந்து விழுந்து "பைசாப் பெறாத உன்னை என் மகள் கல்யாணம் செய்து கொண்டால் அவள் கதி அதோகதி தான். உன்னால் அவளை வைத்துக் காப்பாற்ற முடியுமா? போ, போ" எனக்கூறி என்னை விரட்டி விட்டார். இந்த அவமானம் தாங்க முடியாமல் தான் நான் வாழ்க்கையின் மீதே விரக்தி அடைந்து விட்டேன். அதனால் தான் உன்னைத் தேடி இங்கு வந்தேன்" என்றான்.

மந்திரக்காரி எழுந்து அருகில் இருந்த குளத்திலிருந்து ஒரு வாத்தைப் பிடித்து எடுத்து வந்தாள். அதனை மாதவனிடம் கொடுத்து "நீ விரும்பும் போதெல்லாம் இந்த வாத்து முட்டை இடும். நீ அவற்றை விற்றுப்பணம் சேர்த்து நீ விரும்பும் பத்மாவை மணந்து கொள்" என்றாள். மாதவனும் அந்த வாத்தை வாங்கிக் கொண்டு போனான்.

மறுநாளே மாதவன் மந்திரக்காரியைக் காண வாத்துடன் அவளது குடிசைக்கு வந்தான். மல்லிகா ஓடிப்போய் அவனுக்குக் குடிக்க நீர் கொண்டு வந்து கொடுத்தாள். அவனும் அதைக் குடித்துவிட்டு மந்திரக்காரியைப் பார்த்தான். அவளும் "உன் முகம் வாடி இருக்கிறதே. இப்போது ஏன் இங்கு வந்தாய்?" என்று கேட்டாள்.

மாதவனும் "பத்மாவின் தந்தையும் இந்த வாத்தைப் பார்த்துவிட்டு 'இதுவா உன் வியாபரத்திற்கு முதலீடு? இதை ஏதாவது ஒரு நரியோ, ஒரு மனிதனோ பிடித்துக் கொன்று தின்றுவிட்டால் உன் வியாபாரமே போயிற்றே. இதனை நம்பி உனக்கு என் பெண்ணைக் கொடுக்க மாட்டேன்' என்று கூறிவிட்டார். அதனால் தான் வந்தேன்" என்றான்.

மந்திரக்காரியும் சற்று யோசித்து விட்டுத் தன் குடிசையிலிருந்து ஒரு மூங்கில் கூடையை எடுத்துக் கொடுத்து "நீ இதைக் கவிழ்த்தால் நீ விரும்பும் காயோ கிழங்கோ கிடைக்கும். இதை கொண்டு காய் கறி வியாபாரம் செய்து பணம் சம்பாதிக்கலாம். பத்மாவையும் மணந்து கொள்ளலாம்" என்றாள். மாதவனும் அந்தக் கூடையை வாங் கிக் கொண்டு போனான்.



ஆனால் மறுநாளே மாதவன் காட்டிற்குக் கூடையுடன் வந்தான். மாதவனைக் கண்டதும் மல்லிகா ஓடிப்போய் தண்ணீர் கொண்டு வந்து குடிக்கக் கொடுத்தாள். அத னைக் குடித்து விட்டு அவன் மந் திரக்காரியைப் பார்த்து "இந்தக் கூடையை நம்பியும் பத்மாவின் தந்தை எனக்குத் தன் மகளைக் கல் யாணம் செய்து கொடுக்கத் தயா ராக இல்லை. ஏனெனில் இந்தக் கூடை ஏதாவது ஒரு தீவிபத்தில் சிக்கி எரிந்து விட்டால் பிறகு எப்படி என்னால் வியாபாரம் செய்ய முடியும் என்று கேட்டார். நான் பதில் கூறமுடியாமல் வந்து விட்டேன்" என்றான்.

மந்திரக்காரியும் சற்று யோசித்து விட்டுக் குடிசைக்குள் போய் ஒரு மரப்பெட்டியை எடுத்து வந்தாள். அதை மாதவனிடம் கொடுத்து "இதற்குள் நீ கைவிட்டு எடுத்தால் உன் கையில் நீ நினைத்த பொருள் கிடைக்கும். பொருள்கள்தான் கிடைக்குமே ஒழிய உயிருள்ளவர் கள் கிடைக்க மாட்டார்கள். அத னால் பத்மாவை நினைத்துக் கை விட்டு ஏமாந்து போகாதே" எனக் கூறி அனுப்பினாள்.

மறுநாள் மாதவன் திரும்பி மந் திரகாரியின் குடிசைக்கு வந்தான். அவனைக் கண்டதும் மல்லிகா ஓடிப்போய்த் தண்ணீர் எடுத்து வந்து குடிக்கக் கொடுத்தாள். அவ னும் அதை வாங்கிக் குடித்துவிட்டு மந்திரக்காரியிடம் "அந்தப் பத்மா வின் தந்தை உன்னை வாய்க்கு வந்தபடி எல்லாம் பேசுகிறான். அற்பன். அவன் சொன்னதை எல் லாம் சொன்னால் உனக்கு கோப மும் ஆத்திரமுமே வரும்" என்றான்.



மந்திரசக்தியால் உன்னிடமிருந்து எடுத்துக் கொண்டு விட்டால் என் மகள் கதி என்ன ஆவது? அதனால் நீ அந்த மந்திரக்காரியின் பெண்ணையே கட்டிக்கொள். என் மகளை உனக்கு நான் கொடுக்கமாட்டேன் போ'' என்றான். இப்படி சொல்ல அவனுக்கு என்ன திமிர்'' என்றான்.

அதைக் கேட்டுக் கொண்டிருந்த மல்லிகா சட்டென அங்கிருந்து போய்விட்டாள். மந்திரக்காரி ஒரு நிமிடம் யோசித்துவிட்டு ''பத்மாவின் தந்தை கூறியதில் தவறு எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அதுசரி, உனக்கு என் மகள் மல்லிகாவை மணந்து கொள்ள இஷ்டம்தானே?'' என்று கேட்டான்.

மாதவனும் ''எனக்கு இஷ்டம் தான். ஆனால் அவள் என்ன நினைக்கிறாளோ!'' என்றான். மந்திரக்காரியும் ''நான் சொன்னால் மல்லிகா சரி என்பாள். என் பேச்சைத் தட்டமாட்டாள். அவளை உனக்கே கல்யாணம் செய்து கொடுக்கிறேன். எப்போது எங்கே உங்கள் விவாகத்தை வைத்துக் கொள்ளலாம்?'' என்று கேட்டாள்.

மாதவனும் ''கல்யாணத்தை ஏதாவது ஒரு கோவிலில் நடத்தலாம். ஆடம்பரமாக எதுவும் செய்ய வேண்டாம். எனக்கும் ஊரில் நல்ல உத்தியோகமும் கிடைத்திருக்கிறது''

மந்திரக்காரியும் ''அப்படி என்ன தகாத வார்த்தைகளை அவன் சொன்னான்? அதைத்தான் நானும் கேட்டு வைக்கிறேனே'' என்றாள்.

மாதவனும் ''இந்த மரப்பெட்டியை நான் பத்மாவின் தந்தையிடம் காட்டியதும் அவன் அசந்தே போய்விட்டான். ஆனால் அடுத்த விநாடியே ''நீ இந்த அதிசயப் பொருள்களை எல்லாம் எங்கே இருந்து கொண்டு வந்தாய்? இதையெல்லாம் காட்டிலுள்ள மந்திரக்காரியா உனக்குக் கொடுத்தாள்? அப்படியானால் நீ என் மகளைக் கல்யாணம் செய்து கொள்வதை விட அவள் மகள் மல்லிகாவையே மணந்து கொண்டு சுகமாக இருக்கலாமே. இந்த பெட்டியை அவள்

என்றான்.

இரண்டு நாட்களுக்குப் பின் மாதவனுக்கும் மல்லிகாவுக்கும் திரு மணம் நடந்தது. மாதவன் மல்லி காவுடன் கிளம்பும் போது மந்திரக் காரி அவனிடம் "நீ நான் கொடுத்த மூன்று அதிசயப் பொருள்களை யும் எடுத்துச் செல்" என்றாள். மாதவனோ "வேண்டாம். மந்திர சக்தியை நம்புவதைவிட நான் என் உழைப்பையே அதிகமாய் நம்பு கிறேன்" என்றான். மந்திரக்காரி யும் "பேஷ் சரியாகச் சொன்னாய்" என்றாள்.

அவர்கள் மந்திரக்காரியிடம் விடை பெற்றுக் கொண்டு அவள் கொடுத்த உணவுப் பொட்டலத்தை வாங்கிக் கொண்டு கிளம்பினார் கள். வழியில் ஒரு மரத்தடியே அவர்கள் சாப்பிடுவதற்காக உட் கார்ந்தார்கள். அவர்கள் உணவுப் பொட்டலத்தைப் பிரித்த போது அதிலிருந்து ஒரு கடிதம் விழுந் தது.

மாதவன் அதை எடுத்துப் படித் தான். அதில் "மாதவா! நீ பத்மா பற்றிக்கூறியது வெறும் கட்டுக் கதை என்றும் நீ மல்லிகாவை மணக்கவே இப்படி ஒரு நாடகம் ஆடினாய் என்பதும் எனக்குத் தெரியும். நீயும் மல்லிகாவை விரும்புகிறாய். அவளும் உன்னை விரும்புகிறாள். ஆனால் உன் பரீட்சிக்கவே மூன்று அதிசயப் பொருள்களைக் கொடுத்தேன். நீ அவற்றை ஏற்காமல் மல்லிகாவை மணப்பதிலேயே குறியாக இருந் தாய். நீங்கள் இருவரும் சுகமாக வாழுங்கள்" என்று எழுதி இருந் தது.

அதைப் படித்தபின் மாதவ னும் "அடேயப்பா! மந்திரக்காரி யின் மகள்தான் சாமார்த்தியசாலி என்று நினைத்தேன். உன் அம்மா உன்னைத் தூக்கி அடித்து விட் டாளே" என்றான்.

மல்லிகா புன்னகை பூத்து நின் றாள்.



# மாற்றத்தின் ஆரம்பம்!

**மா**ணிக்கம் என்பவன் லஞ்சத்தில் ஊறியவன். ஒருமுறை அவன் லஞ்சம் வாங்கும்போது கையும்களவுமாகப் பிடிப்பட்டு கட்டாயப் பணி மன்றத்திற்கு அனுப்பப்பட்டான். அந்த மன்றம் அந்நாட்டு மன்னனால் சித்தஸ்வாதீனம் இல்லாதவர்களுக்கும் உடல் ஊனமுற்றோருக்காகவும் ஏற்படுத்தப்பட்டது. அதில் அவர்களுக்குப் பணிபுரிய தண்டனை பெற்ற கைதிகள் அனுப்பப் பட்டனர்.

மாணிக்கம் அந்த மன்றத்தில் பணிபுரியும்போது அங்கு சதானந்தர் என்ற மகான் வந்து அந்த மன்றத்தில் உள்ளவர்களுக்குப் பணிபுரிந்தவாறே பத்து நாட்கள் தங்கினார்.

அதைக் கண்டமாணிக்கம் "ஐயா! நீங்களோ மகான். இவர்களுக்கெல் லாம் நீங்கள் ஏன் பணிபுரிய வேண்டும்? நான் இங்கு வந்து பணிபுரிந்து கொண்டிருப்பது பற்றி வெட்கப்படுகிறேன்" என்றான். சதானந்தர் அது கேட்டு "வெட்கம் எதற்கு! மனிதனுக்கு பணிபுரிவது மகத்தானது. ஒரு வேலையை எடுத்துக் கொண்டால் அதைப் பாதியில் நிறுத்திவிடக் கூடாது" என்றார்.

அப்போது மாணிக்கம் "இன்றுதான் நான் செய்வது உங்களது செயல் போல் மகத்தானது எனத்தெரிந்து கொண்டேன்." என்றான். அப்போது அவர் "நீ இதுபற்றி சிந்தித்துப்பார். உனக்கே விளங்கும்" என்று கூறிவிட்டு சென்றார்.

மாணிக்கம் யோசித்துப் பார்த்தான். ஆம்! அவன் தண்டனை அடைந்து கைதியாக அங்கு வந்து கட்டாயத்தின் பேரில் பணிபுரிபவன், ஆனால் சதானந்தரோ தாமே வந்து பணிபுரிபவர். அவரோடு தன்னை ஒப்பிட்டுக் கொண்டது மாபெரும் தவறு என அவன் உணர்ந்தான். அன்று முதல் அவன் தன்கெட்ட பழக்கங்களை விட்டு புதிய மனிதனாக மாறி மக்களுக்குப் பணி புரியலானான்.






**10**

*[விநோதன் சுகுமாரனைக் கடல் கொள்ளைக் காரர்களிடமிருந்து காப்பாற்றினான். விநோதனின் கட்டளைப்படி அக்கொள்ளைக் காரர்களிடம் அகப்பட்ட ஐந்து சிறுவர்களை மீட்டதோடு மலைத்தீவில் கொள்ளைக்காரர்கள் சேர்த்துவைத்திருந்த ஏராளமான செல்வத்தை நாட்டு மன்னனிடம் கொடுத்து அதனை ஏழை எளியவர்களுக்கு உதவக் கொடுக்கும்படி வேண்டினான். கடல் கொள்ளைக்காரர்களும் சிறையில் அடைக்கப்பட்டார்கள், பிறகு—]*

கொள்ளைக்காரர்களும் கடல் கொள்ளைக்காரர்களும் பிடிபட்டுப் போனதால் நாட்டில் திருடர் பயம் என்பது இல்லாது போயிற்று. நல்லவர்களைக் காக்க அற்புத சக்தி வாய்ந்த ஒரு மகான் அந்நாட்டில் இருக்கிறார் என்ற வதந்தி எங்கும் பரவியது. இதனால் கொடியவர்களின் கொட்டம் அடங்கியது. நேர்மையும் நல்நோக்கும் கொண்ட மன்னன் சுகுமாரனைத் தன் அந்தரங்க ஆலோசகனாக அமர்த்திக் கொண்டான். இதனால் நாட்டின் வாழ்வு நல்லவிதமாகவே அமையலாயிற்று.

விநோதன் இமயமலைக்குப் போய் சதானந்தர் தவம்புரியும் குகையின் அருகிலேயே இருந்து தானும் தவம்புரியலானான்.

ஒரு நாள் சதானந்த முனிவர்



சதானந்தரும் "நீ சொல்வது சரியே ஆனால் மனித இயல்பு விசித்திரமானது. சிலருக்கு அமைதி யாக வாழ்க்கை நடத்த இயலாது. எப்போதும் எதாவது ஒரு பிரச்னை தேவைப்படும். இந்த நிலை இருந் தால்தான் அவர்களால் நாட்களை மகிழ்ச்சியுடன் கழிக்க முடியும்" என்றார்.

விநோதனும் "அப்படிப்பட்ட மனிதர்களால் பிறருக்கு இடைஞ் சல் விளைவிக்காமல் இருக்கமுடி யாதே" எனவே சதானந்தரும் "விநோதா! இவர்கள் கொள்ளைக் காரர்களைவிட மிகவும் கொடிய வர்கள். இவர்கள் கொள்ளைக் காரர்களை போல அல்லாமல் சமுதாயத்தில் உயர் அந்தஸ்தை வகிப்பவர்கள். இவர்களில் சில ரிடம் அதிகார பலம் இருக்கும். வேறு சிலரிடம் பணபலம் இருக் கும். வேறு சிலரிடம் அறிவு மித மிஞ்சி இருக்கும். இவர்களால் பல இடைஞ்சல்கள் ஏற்பட்டு வருகின் றன. நீ அவற்றை போக்க வேண் டும். அதற்காக நீயே அவற்றை நேரில் காணவும் வேண்டும்" என்றார்.

விநோதனை தன்னருகே அழைத்து "விநோதா! உன்னைப் போல இங்கு பலயோகிகள் தவம் செய்து பூரணசித்தி அடைந்திருக்கிறார்கள். நீயும் அவர்களைப் போல மோட் சம் அடையவா விரும்புகிறாய்? நீ உலகில் செய்யவேண்டியது இன்ன மும் எவ்வளவோ உள்ளது. அதற் காக உனக்கு என் சக்தியில் கொஞ் சம் அளிக்கிறேன். அதைக் கொண்டு நீ உலகத்தவருக்கு நன்மை புரிய வேண்டும்" என்றார்.

அப்போது விநோதன் "குருவே! இப்போது நாட்டில் அமைதி நிலவு கிறது. அவ்வப்பேது சில சிறு பிரச் னைகள் தலை தூக்குகின்றன. அவற்றை மக்களே தீர்த்துக்கொள்ள வேண்டும்" என்றான் பணிவுடன்.

விநோதனும் "ஆகா! அப்படியே செய்கிறேன். முதலில் தாங்கள் ஏதாவது ஒன்றை பற்றிக் கூறினால் அதனை கவனிக்கிறேன்" என்றான். சதானந்தரும் "நான் தியானத்தில் மூழ்கி இருந்த போது ஒரு காட்சி

எனக்குத் தென்பட்டது. அதில் இரண்டு பிரமுகர்கள் ஏதோ சதி செய்ய இரகசியம் பேசுவது போலக் கண்டேன். அவர்களின் ஒருவனின் முகம் மட்டும் தெளிவாக தெரிந்தது. மற்றவன் யாரென்று தெரியவில்லை. தெளிவாகத் தெரிந்தவன் ருத்திரபுரியின் முதலமைச்சன். அவன் நாளை இரவில் மறுபடியும் மற்றவனைத் தன் வீட்டிற்கு வரச்சொல்லி இருக்கிறான். நீ நாளை அந்த முதலமைச்சனின் வீட்டிற்கு போய் அவர்களது சதி திட்டம் என்ன என்று தெரிந்து கொண்டு வரவேண்டும்'''என்றார்.

விநோதனும் அவ்வாறே செய்வதாகக் கூறி அவரை வணங்கி அவரது ஆசிகள் பெற்றுச் சென்றான்.

மாலைப் பொழுதாகி விட்டது அரண்மனைக்கும் முதலமைச்சரின் வீட்டிற்கும் மத்தியில் ஒரு பெரிய அரசமரம் அடர்ந்து வளர்ந்திருந்தது. விநோதன் அந்த மரத்தில் ஏறி மறைந்து உட்கார்ந்து கொண்டு முதலமைச்சரின் வீட்டைக் கண்காணிக்கலானான்.

அரண்மனை வாசலில் பலர் உள்ளும் வெளியும் போய் வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் பேசிக் கொண்டதிலிருந்து அரசகுமாரி கிருஷ்ணகுமாரி லாவண்யபுரியிலிருந்து திரும்பி வரப்போவது



தெரிந்தது லாவண்யபுரியின் மன்னன் ஜெயவர்மன் அரசகுமாரியின் தாய்மாமன். அவனுக்கும் சரி, ருத்திரபுரிமன்னனுக்கும் சரி ஆண் குழந்தையே பிறக்கவில்லை. அதனால் ருத்திரபுரி மன்னனின் புதல்வி கிருஷ்ணகுமாரிதான் இரு நாடுகளுக்கு வாரிசு. ஏனெனில் ஜெயவர்மனுக்கு குழந்தையே பிறக்கவில்லை.

சற்று நேரத்தில் யானை மீது அலங்கரிக்கப்பட்ட அம்பாரியில் அமர்ந்து அரசகுமாரி கிருஷ்ணகுமாரி அரண்மனைக்கு வந்து சேர்ந்தாள். அந்த யான்னயின் பின்னால் இரண்டு யானைகளின் மீது அவளது தோழிகள் அமர்ந்து வந்தனர். அரசகுமாரியைக் காக்க குதிரை



வீரர்களும் வந்து கொண்டிருந்தார்கள்.

அரண்மனை வாசலுக்கு வந்ததும் அரசகுமாரியின் யானையும் மற்ற யானைகளும் நின்றன. யாவரும் கீழே இறங்கினர். அரசகுமாரி மெத்தென உள்ள விரிக்கப்பட்ட கம்பளத்தின் மீது நடந்து அரண்மனைக்குள் சென்றாள். அவனை அவளது தந்தை விசுவவர்மன் கைலாகு கொடுத்து மகிழ்ச்சி ததும்ப உள்ளே அழைத்துச் சென்றான்.

கிருஷ்ணகுமாரியின் தாய் குழந்தையைப் பெற்றதும் இறந்து போய் விட்டாள். அதற்கும் பிறகு விசுவவர்மன் வேறு பெண்ணை மணந்து கொள்ளவில்லை. மன்னன் அவளை மிகவும் பாசத்துடன் வளர்த்து வந்தான். ருத்திரபுரியின் அண்டை நாடான லாவண்யபுரியின் மன்னன் ஜெயவர்மனும் தன் சகோதரியின் மகளான கிருஷ்ணகுமாரியைத் தன்மகள் போலக் கருதி வந்தான். அதன் காரணமாக கிருஷ்ணகுமாரி ஒருவருஷத்தில் ஆறு மாதம் ருத்திர புரியிலும் மற்ற ஆறுமாதம் லாவண்யபுரியிலுமாக இருந்து வரலானாள்.

இம்முறை லாவண்யபுரியிலிருந்து கிருஷ்ணகுமாரி ருத்திரபுரிக்குத் திரும்பி வந்தபோது அழகான நவரத்தினமாலையை அணிந்து வந்திருந்தாள். அதனை அவளது தாய்மாமன் அவளுக்குப் பரிசாக அளித்திருந்தான். அந்த மாலை வம்சபரம்பரையாக லாவண்யபுரி அரச குடும்பத்திடம் இருந்து வந்ததாகும். அதன் மத்தியில் பெரிதாக இருந்த வைரக்கல்லின் பெயர் சந்திர காந்தம். அந்த வைரக்கல் மிகவும் விலை உயர்ந்தது என உலகப்புகழ் பெற்றிருந்தது.

தன் மகளின் கழுத்தில் புதிய நவரத்தின மாலை இருந்ததைக் கண்ட விசுவவர்மன் "ஆகா! எவ்வளவு அழகான மாலை! இதனை உன் மாமாதானே உனக்குக் கொடுத்தார்? அது சந்திர காந்த வைரம். இதனை உன் மாமா மிக பத்திரமாகப் பாதுகாத்து வந்தது எனக்குத் தெரியும். இது அவருக்கு வம்ச

பரம்பரையாகக் கிடைத்த வைரம் இதற்கு இணையான வைரம். இவ்வுலகில் இல்லை. மிகமிக விலையுயர்ந்தது. எனவே இதனை மிகவும் ஜாக்கிரதையும் பாதுகாத்து வரவேண்டும்'' என்றான்.

இதே சமயம் முதலமைச்சரின் வீட்டில் இருவர் பேசுவதை விநோதன் கண்காணித்ததோடு அவர்கள் பேசுவதையும் கேட்க மறைந்து நின்றான். அப்போது முதலமைச்சர் முன்னிருந்த மந்திரவாதி "இவ்வளவு நாட்களாகத் தொலைதூரத்திலிருந்த அதிர்ஷ்டம் இப்போது உன்னருகே வந்துவிட்டது. இனி நீ கை நீட்டி அதனை எடுக்க வேண்டியதுதான் பாக்கி'' என்றான்.

முதலமைச்சன் அந்த மந்திரவாதி கூறுவதைக் கவனமாகக் கேட்கலானான். மந்திரவாதியும் "அதிர்ஷ்டம் உன்னருகேதான் வந்திருக்கிறது. உன்னிடமே வந்து விடவில்லை. அதனை இவ்வளவு தூரத்திற்கு இழுத்து வந்தவன் யார் தெரியுமா? நான்தான் எப்படி என்று கேட்கிறாயா? இவ்வளவு நாட்களாக லாவண்யபுரியிலே அந்நாட்டு அரசகுடும்பத்தினரிடம் மட்டுமே இருந்து வந்த நவரத்தினமாலையை என் மந்திர சக்தியால் இங்கு வரவழைத்து விட்டேன். மன்னன் ஜெயவர்மனின் மனதை என் மந்திரசக்தியால்



இயக்கி அந்தப் பழங்கால நவரத்தின மாலையை ருத்திரபுரி அரசகுமாரிக்குப் பரிசாகக் கொடுக்கும்படிச் செய்தேன். அந்த மாலையில் தான் சந்திரகாந்தம் என்ற விலையுயர்ந்த வைரக்கல் பதிக்கப்பட்டு உள்ளது. எல்லோரும் அந்த மாலையில் பதிக்கப்பட்டுள்ள சந்திரகாந்த வைரத்தை மிகவும் விலையுயர்ந்த வைரம் என்று மட்டுமே அறிவார்கள். ஆனால் அது அரிய சக்தி வாய்ந்தது என்பதை விசுவவர்மனோ, ஜெயவர்மனோ அல்லது வேறு யாருமோ அறியவில்லை'' என்றான் அட்டகாசமாகச் சிரித்தவாறே.

மந்திரவாதி என்ன சொல்லப் போகிறான் என்பதை மறைந்திருந்த



விநோதன் கவனமாகக் கேட்கலானான். அவர்கள் பேசியதிலிருந்து முதலமைச்சனும் மந்திரவாதியும் ஒரே குருவிடம் கல்வி பயின்றவர்கள் என்றும் நெருங்கிய நண்பர்கள் என்றும் தெரிந்தது. அதுமட்டுமல்ல அவர்களின் குருவின் குருதான் லாவண்யபுரி அரச குடும்பத்தவருக்கு சந்திரகாந்த வைரத்தைக் கொடுத்தவர் என்றும் அதனால்தான் அந்த வைரத்தின் சக்தி என்ன என்பதை மந்திரவாதி அறிந்து கொண்டான் என்பதும் விநோதனுக்குத் தெரிந்தது.

அந்த மந்திரவாதி ஒரு நாள் பழைய ஓலைச்சுவடிகளைப் பரசீலித்துக் கொண்டிருந்தானாம். அவற்றில் ஒன்றிலிருந்து சந்திரகாந்த வைரத்தின் அற்புத சக்தி பற்றிய ரகசியம் தெரிந்ததாம். அந்த வைரத்தை அணிந்து சில பூஜைகளை விசேஷ முறையில் ஒருவன் செய்தால் அவன் உலகில் மன்னர்களுக்கு எல்லாம் மன்னனாக அதாவது சக்கரவர்த்தியாக ஆகிவிடுவானாம்.

இதனைப் படித்த நாளிலிருந்து மந்திரவாதி எப்படியாவது அந்த வைரத்தைத்தான் அடைந்து விட வேண்டும் என்று ஆசைபட்டான். எனவே அவன் லாவண்யபுரி மன்னனான ஜெயவர்மனைக் கண்டு "உங்கள் மருமகள் கிருஷ்ண குமாரியை துஷ்ட கிரகங்கள் பிடித்து வருகின்றன. அவற்றால் அவளது உயிருக்கே ஆபத்து நேரிடலாம். நவக்கிரக பரிகாரம் செய்ய உங்களிடம் பத்திரமாக உள்ள நவரத்தின மாலையை உங்கள் மருமகளின் கழுத்தில் அணிந்திருக்கச் செய்தால் அவளது உயிருக்கு எவ்வித ஆபத்தும் நேராது" எனக் கூறினான்.

ஜெயவர்மனும் மந்திரவாதி கூறியதை நம்பி கிருஷ்ணகுமாரியின் உயிருக்கும் எவ்வித அபாயமும் நேர்ந்து விடக்கூடாது என நினைத்து தன்னிடமிருந்த பழங்கால நவரத்தின மாலையை எடுத்துத் தன் மருமகளின் கழுத்தில் போட்டு அவளை ருத்திரபுரிக்கு அனுப்பி வைத்தான். ஜெயவர்மன்

தன் மருமகளிடம் அந்த மாலையைப் பரிசாக அளிப்பதாகத் தான் கூறினான். மந்திரவாதி தெரிவித்த காரணத்தை அவளிடம் கூறவில்லை.

மந்திரவாதி லாவண்யபுரத்தில் ஜெயவர்மனிடம் இவ்வாறு கூறித்தான் மாலையை கிருஷ்ண குமாரிக்கு ஜெயவர்மன் கொடுக்குமாறு செய்தான். ருத்திரபுரிக்கு வந்து முதலமைச்சனிடம் பெருமை அடித்துக் கொண்டது போல மந்திர சக்தியால் அல்ல. ஆனால் தனக்கு அரிய சக்தி உள்ளது என முதலமைச்சன் அறிய வேண்டும் என்பதற்காகவே அவன் அவ்வாறு கூறினான். முதலமைச்சனும் தன் நண்பன் கூறியதை நம்பி விட்டான்.

முதலமைச்சன் தன் மந்திரவாதி நண்பனின் உதவியால் சக்கரவர்த்தியாக ஆகப் போவதாக மனக்கோட்டைக் கட்டலானான். ஆனால் சந்திரகாந்த வைரத்திற்குச் சிறப்பான பூஜைகள் செய்ய வேண்டும் என்ற சாக்கில் அதனைத் தானே எடுத்துக் கொண்டு சக்கரவர்த்தியாகிவிட வேண்டும் என்று மந்திரவாதி திட்டம் போட்டான். இதனை முதலமைச்சன் அறியவில்லை.

விநோதனுக்குத் தான் அபூர்வ சக்திகள் உண்டே. அவன் மந்திரவாதியின் திட்டத்தை அறிந்து கொண்டு விட்டான். முதலமைச்சன் முட்டாள்தனமாகத் தன் மந்திரவாதி நண்பனை முழுக்க முழுக்க நம்புகிறான் என்றும் மந்திரவாதி பக்கா சுயநலக்காரன் என்றும் அறிந்து கொண்டான். இப்படிப்பட்ட வஞ்சகன் ஒரு வேளை சக்கரவர்த்தியாகி விட்டால் மக்கள் என்னபாடு படுவார்களோ என எண்ணி விநோதன் கவலை கொண்டான். அதைத் தடுக்க என்ன செய்யலாம் என்று யோசிக்கலானான்.

(தொடரும்)






# இரு சீடர்கள்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளாராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே நீ ஏன் இவ்வளவு சிரமப்படுகிறாய்? ஒரு நாட்டை ஆளும் மன்னன் ஏதோ ஒரு அற்ப ஆசைக்காக இப்படி சிரமப்படுவது முறை அல்ல. நீ யாருக்காக இப்படி பாடுபடுகிறாயோ அவர் உன்னை மற்றவர்களுக்கும் சமமாக நினைக்கிறாரா என்பது சந்தேகமே. இதை விளக்க வித்தியாநாதர் என்ற முனிவரையும் அவரது இரு சீடர்களைப் பற்றியதுமான கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக்கதை சொல்ல ஆரம்பித்தது.

## வேதாளம் சொல்லும் கதை



ஒரு காட்டில் வித்தியாநாதர் என்ற முனிவர் ஆசிரமத்தை அமைத்துக் கொண்டு தம் சீடர்களுக்குக் கல்வி புகட்டி வந்தார். அவரது சீடர்களில் உலக நாதன் என்பவனும் சிவதாசன் என்பவனும் எல்லாச் சீடர்களையும் விட முன்னதாக நின்றனர். அவர்கள் தவ வலிமை கொண்டவர்களாகவும் விளங்கினார்கள்.

ஒரு நாள் வித்தியாநாதர் அந்த இரு சீடர்களையும் அழைத்து "நீங்கள் இருவரும் என் சீடர்களில் சிறந்தவர்களாக விளங்குகிறீர்கள். நீங்கள் என்னிடம் கற்க வேண்டியது எல்லாம் கற்றாகி விட்டது இனி உங்கள் இருப்பிடங்களுக்கு நீங்கள் செல்லலாம்" என்றார்.

இருசீடர்களும் அவ்விதமே செய்வதாகக் கூறி "குரு சிரேஷ்டரே! எங்களுக்கு இப்போது அபூர்வ சக்திகள் கிடைத்துள்ளன. எங்கள் சக்தி கண்டு மற்ற மனிதர்கள் எங்களைச் சீண்டி துன்புறுத்தினால் நாங்கள் கோபம் அடைந்து அவர்களைச் சபித்தாலும் சபித்து விடுவோம். எங்களுக்குச் சாபம் கொடுக்கத்தான் தெரியும். கொடுத்த சாபத்தை விலக்கும் முறை தெரியாது. எனவே அதையும் நீங்கள் எங்களுக்குக் கற்பித்தால் எல்லோருக்கும் நன்மை செய்வது போல ஆகும்" என்றார்.

அப்போது வித்தியாநாதர் அவர்களிடம் தன் ஆசிரமத்தில் மேலும் ஒரு மாதம் தங்கும் படிக் கூறினார். இரண்டு வாரங்கள் கழிந்ததும் அவர் சிவதாசனிடம் "சாபத்தை விலக்கும் முறையை அறிய கடும் உபாசனை மேற்கொள்ள வேண்டும். அது எல்லோராலும் முடியாது. உனக்கு அதனைக் கூறுகிறேன்" என்றார்.

சிவதாசன் மிகவும் மகிழ்ந்து போனான். அவன் தன் குரு கூறிய படி உபாசனை செய்யலானான். அதே சமயம் வித்தியாநாதர் உலக நாதனை அழைத்து "நீ இனியும் இங்கே இருப்பது வீணே. உன்னால் சாபத்தை விலக்கும் முறையைக் கற்க முடியாது என்று

எனக்குத் தெரிந்து போயிற்று. அதனால் மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டும்'' என்று கூறி அவனுக்கு விடை கொடுத்து அவனது ஊருக்கு அனுப்பி விட்டார்.

சிவதாசன் தன் உபாசனைய்யை முடித்துக் கொண்டு குருவிடம் விடை பெற்றுக் கொண்டு தன் ஊருக்குப் போய்ச் சேர்ந்தான். இதற்குப் பின் ஐந்தாறு ஆண்டுகள் கழிந்தன. ஒரு நாள் அந்நாட்டு மன்னன் ருத்திரசேனன் வித்தியாநாதரைத் தன் தர்பாருக்கு வரும்படி வேண்டி ஆட்களை அனுப்பினான். அவரும் மன்னன் அனுப்பிய ரதத்தில் அமர்ந்து அரண்மனையை அடைந்தார்.

மன்னன் அவரிடம் ''நான் என் தர்பாரில் தகுதியும் திறமையும் பெற்ற ராஜகுரு ஒருவரை நியமனம் செய்ய விருப்புகிறேன். அப்பதவிக்கு ஏற்றவர்கள் தங்களது சீடர்களான உலகநாதனையும் சிவதாசனையும் எல்லோரும் பரிந்துரைக்கிறார்கள். சிவதாசன் நாடெங்கிலும் பயணம் செய்து மிக்வும் சக்தி வாய்ந்தவன் எனப் பெயர் பெற்றிருக்கிறான். அவனைக் கண்டு கொடியவர்கள் நடுங்கி தம்மைத் திருத்திக் கொண்டு நல்லவர்களாக ஆகி விடுகிறார்கள். அவனுக்குப் பல சீடர்கள் கூட இருக்கிறார்கள். அவர்கள் தம்மை 'தாச சேனை' எனக் கூறிக் கொண்டு கொடியவர்களைத் தேடிப் பிடித்து தம் குருவின் முன் கொண்டு போய் நிறுத்துகிறார்கள். அக்கொடிய





கேட்டு பலர் திருந்தியும் உள்ளார் கள். அவனுக்கு மக்களிடையே உயரிய மதிப்பு உள்ளது. ஆனால் அவனிடம் அரிய சக்திகள் உள்ள னவா என்று யாருக்கும் தெரியாது'' என்றான்.

வித்தியாநாதரும் ''எனக்கு இரு வரில் உலகநாதனையே பிடிக்கும். அவனே இந்த ராஜகுருப் பத விக்கு ஏற்றவன்'' என்றார். மன்ன னும் வித்தியாநாதரின் யோசனையை ஏற்று உலகநாதனையே ராஜகுருவாக அமர்த்திக் கொண் டான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''மன்னனே! ஆரம்பத்திலிருந்து வித்தியாநாதர் தம் இரு சீடர்களையும் நடத்திய விதம் முரண்பட்டதாக இருக்கிறது. அவர் சிவதாசனுக்குத்தான் சாபத்தை விலக்கும் முறையைக் கற்பித்தார். உலகநாதனால் கற்க முடியாது என்று கூறி ஊருக்கு அனுப்பி விட் டார். ஆனால் ராஜகுருவை நிய மிக்கும் விஷயத்தில் அவர் சிவதாச னின் பெயரை சிபாரிசு செய்யா மல் உலகநாதனையே அப்பதவி யில் அமர்த்தும்படிக் கூறினார். இவற்றைப் பார்த்தால் அவரது போக்கு முன்னுக்குப் பின் முரணா கத்தானே இருக்கிறது. அவரது போக்கைக் கண்டு எல்லோரும் சிவதாசன்தான் அவருக்குப் பிரி யமான சீடன் என்று எண்ணினார்

வர்கள் எங்கே சிவதாசன் தங் களை சபித்து விடுவானோ எனப் பயந்து திருந்தி விடுகிறார்கள். இப்படி நான் சிவதாசனைப் பற் றிப் பலர் கூறக் கேட்கிறேன்'' என்றார்.

வித்தியாநாதரும் ''அப்படியா? சரி, உலக நாதனைப் பற்றி என்ன தெரிந்து கொண்டீர்கள்?'' என்று கேட்கவே மன்னனும் ''அவனுக்கு சிவதாசனைப் போல அவ்வளவு புகழ் இல்லை. அவனுக்குச் சீடர் களும் மிகக் குறைவே. அவன் அவ்வப்போது மக்களை நல்வழிப் படுத்த.சொற்பொழிவுகள் ஆற்றி அறிவுரை கூறுகிறான். அவனது பேச்சைக் கேட்க ஆவலுடன் மக்கள் கூடுகிறார்கள். அவனது அறிவுரைக்

கள். அது தவறா? அல்லது சரியா? இந்த என் சந்தேகத்தைத் தீர்க்க உனக்குச் சரியான பதில் தெரிந்திருந்தாலும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் "உலகில் சிலர் புகழ் பெற விரும்புகிறார்கள். வேறு சிலர் அடக்கமாக இருக்கிறார்கள். சிவதாசன் முதல் ரகத்தைச் சேர்ந்தவன். உலககநாதன் அடக்கமாக இருந்து தன் சக்தியை வெளிச்சம் போட்டுக் காட்டாமல் இருந்தான். சிவதாசனைக் கண்டு மக்கள் பயப்பட்டனர், உலகநாதனை விரும்பி அவன் சொல்வதைக் கேட்கக் கூடினார்கள். சாபத்தைக் கொடுத்து அதை விலக்கவும் சக்தி பெற்றவன் சிவதாசன். இவ்வித சக்தி உலகநாதனுக்கு கிடையாதுதான். ஆனால் ஒரு விஷயத்தை கவனிக்க வேண்டும். ஒருவன் கோபம் கொண்டாலே சாபம் கொடுப்பான். பிறகு அதை விலக்குவான். இதனால் கோபம் கொள்பவன் சிவதாசன் என்றாகிறது. சாபம் விலக்கத் தெரியாததால் உலகநாதன் கோபமே கொள்ளாமல் அமைதியுடன் வாழ்ந்தான். இவற்றை எல்லாம் சீர்தூக்கிப் பார்த்தே அவர் உலகநாதனை அப்பதவியில் அமர்த்தும்படிக் கூறினார். அவரது போக்கிலும் முரண்பாடு இல்லை. சிவதாசனுக்கு சாபத்தை விலக்கும் முறையைச் சொல்லிக் கொடுத்தது அவனால் பிறருக்குக் கெடுதல் ஏற்பட்டாலும் அதை விலக்கி நன்மை புரிய வேண்டும் என்பதற்காகத்தான். உலகநாதனால் அவ்வித ஆபத்து ஏற்படாது என உணர்ந்தே அவர் அவனுக்கு அந்த முறையைக் கற்பிக்கவில்லை'' எனக் கூறினான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி முருங்கமரத்தில் ஏறிக்கொண்டது.





# களைப்பு தந்த நிலம்

தகட்டூரில் தங்கப்பன் என்ற விவசாயி இருந்தான். அவன் மகன் செல்லப்பன். தன் மகன் ஒரு வேலையும் செய்யாமல் ஊர்சுற்றி வருவதைக் கண்டு தங்கப்பன் மிகவும் வருந்தினான்.

ஒருநாள் அவன் தன் மகனை அழைத்து ''செல்லப்பா! இப்படி நீ ஒரு வேலையும் செய்யாமல் ஊர் சுற்றிக் கொண்டே இருந்தால் எப்படி உருப்படுவாய்? ஏதாவது ஒரு வேலை செய்யக் கூடாதா?'' எனவே செல்லப்பனும் ''ஆகா! வேலை செய்யத்தயார். என்ன வேலை செய்ய வேண்டும் நீயே சொல்.'' என்றான்.

தங்கப்பனும் ''நம் வயலுக்குப் போ. அது இப்போது அறுவடைக்குத் தயாராக இருக்கிறது. பயிரைக் குருவி, காக்கை போன்ற பறவைகள் வந்து நாசப்படுத்தாமல் விரட்டு.'' என்றான். அன்று முதல் செல்லப்பன் வயலுக்குப் போய் பரண் மீது அமர்ந்து அங்கு வரும் பறவைகளை விரட்டலானான்.

அந்த வேலை அவனுக்குச் சலிப்பைத் தரவே அங்கு வரும் பறவைகளைப் போலவும் மிருகங்களைப் போலவும் தன் குரலை மாற்றிக் கத்தக் கற்றுக் கொண்டான். நாய், குதிரை, பூனை, மாடு போலக் கத்தி அதற்கு பதில் கொடுப்பது போல அந்தந்த மிருகங்களும் கத்துவதைக் கேட்டு அவன் மகிழ்ந்து வந்தான்.

அந்தப் பகுதியின் ஜமீன்தாரர் நவராத்திரியின் போது வருடா வருடம் ஒரு புதுக்குதிரையை வாங்கி அதன் மீது அமர்ந்து தன் ஊர் வீதிகளில் கம்பீரமாகச் செல்வது வழக்கம். ஒருமுறை அவர் புதி

-எஸ். சோபினி-

தாக வாங்கிய குதிரை மீது ஏறித் தம் ஊர்த் தெருக்களில் செல்லலானார். அந்தக் குதிரையோ முரட்டுக்குதிரை இடக்கு செய்து கொண்டே இருந்தது. அது திடீரென்று கட்டுக்கு அடங்காமல் போய் ஜமீன்தாரரின் ஊரை விட்டு ஓடி தகட்டூரை அடைந்தது.

ஜமீன்தாரர் பயந்து போய்க் குதிரையின் கழுத்தை இறுகக் கட்டிப் பிடித்துக் கொண்டு விட்டார். ஒரு குதிரை வேகமாக ஓடி வருவதையும் அதன் மீது ஜமீன்தாரர் அமர்ந்திருப்பதையும் கண்ட தகட்டூர்காரர்கள் அந்தக் குதிரையைத் தடுத்து நிறுத்த முயன்றும் முடியவில்லை.

குதிரை வேகமாக ஊர் எல்லையை நோக்கி ஓடியது. அப்போது வயலில் இருந்த செல்லப்பன் ஒரு குதிரை கட்டுக்கு அடங்காமல் ஓடிவருவதையும் அதன் மீது ஜமீன்தாரர் இருப்பதையும் கண்டான். உடனே அவன் ஓடிவந்து குதிரை வரும் பாதையில் ஒரு புதரின் பின்னால் மறைந்து கொண்டு குதிரை போலக் கனைத்தான்.

ஒரு குதிரை கனைப்பதைக் கேட்டு ஜமீன்தாரர் ஏறிவந்த முரட்டுக் குதிரை 'டக்' கென்று நின்றது. அது எங்கே இன்னொரு குதிரை என்று சுற்றிலும் பார்க்கலாயிற்று. இதற்குள் ஜமீன்தாரர் சட்டெனக் கீழே குதித்தார். தம் உயிரைக் காப்பாற்றிய மற்ற குதிரை எங்கே என்று பார்க்கலானார். அப்போது செல்லப்பன் குதிரை போலக் கனைத்துக் கொண்டு



புதர் மறைவிலிருந்து வெளியே வந்தான். அந்தக் கனைப்பைக் கேட்டு ஜமீன்தாரரின் குதிரையும் பதிலுக்குக் கனைத்தது.

இதற்குள் ஊராரும் அங்கு வந்து சேர்ந்தார்கள். ஜமீன்தாரரும் செல்லப்பனைப் பார்த்து "நீயா குதிரை போல அந்தப் புதரின் மறைவிலிருந்து கனைத்தாய்?" என்று கேட்டார் அவனும் 'ஆம்' என்றான். அப்போது அவன் தந்தை தங்கப்பன் "இவன் என் மகன். பூனை, நாய், குதிரை, குருவி, கிளி, காக்கை போல எல்லாம் தன் குரலை மாற்றிக் கத்துவான். இந்த உருப்படாத வேலையைத்தான் இவன் செய்து வருகிறான்" என்றான் ஜமீன்தாரர் முன் கைகட்டி நின்று கொண்டு.

ஜமீன்தாரரோ "இவன் இப்படி கத்துவது ஒரு அரியகலை. இம் மாதிரியாராலும் கற்று கத்திவிட முடியாது. இன்று இவன் குதிரை போலக் கனைத்ததால்தான் என் முரட்டுக் குதிரை நின்றது. நானும் உயிர் தப்பினேன். இவன் இப்படி செய்வது வெட்டி வேலை அல்ல. தன் அரிய கலைத்திறனைக் காட்டி வருகிறான். இவன் போன்றவர்களை நாமெல்லாம் பாராட்டி ஆதரவு காட்ட வேண்டும். நான் இவனுக்கு இந்த ஊர் கண்மாய் ஓரமாயுள்ள பத்து ஏக்கர் நிலத்தை இனாமாக அளிக்கிறேன்" என்றார்.

ஊரார் யாவரும் கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள். அப்போது ஜமீன்தார் செல்லப்பனிடம் "அடுத்த ஆண்டு நான் யானை மீது ஏறி வருவேன். நீ யானை போலப் பிளிற வேண்டும் தெரிந்ததா?" என்றார்.

செல்லப்பனும் அப்படியே செய்வதாகக் கூறினான். அதன் பின் தனக்குக் கிடைத்த நிலத்தில் விவசாயம் செய்தும் தான் கற்ற அரிய கலையை அபிவிருத்தி செய்து கொண்டும் எல்லோரையும் மகிழ்வித்து வந்தான்.



# அம்புலிமாமா அனுபந்தம்—38




நம் கடவுள்:

## கௌதம புத்தர்

நேபாளமும் இன்றைய உத்தரப்பிரதேசமும் சேரும் எல்லையில் அந்நாளில் கபிலவஸ்து என்ற நகரம் இருந்தது. அதனை ஆண்ட அரசகுடும்பத்தில் சித்தார்த்தர் கி.மு. 566ல் பிறந்தார். உலகிலுள்ள கஷ்டங்களைக் கண்டு அவர் அதற்கு முக்தி மார்க்கம் காண தன் மனைவிமக்களையும் நாட்டையும் துறந்து சன்னியாசியாகிப் பல வருடங்கள் கடும் தவம் செய்தார். திடீரென அவருக்கு ஞானோதயம் ஆனதால் அவர் புத்தர் என்ற பெயர் பெற்றார். கி.மு 566 லிருந்து கி.மு. 486 வரை வாழ்ந்த கௌதம புத்தர் மக்களுக்குத் தான் கண்ட அரிய வழியைப் போதித்தார்.

மனிதர்களின் ஆசைகளே உலகில் துயரங்களுக்கு மூலகாரணம். ஆசைகளை விட்டொழித்தால் மனிதன் கஷ்டப்படாமலும், பிறப்பு இறப்பிலிருந்து முக்தியும் அடைந்து நிர்வாண நிலை எய்வான் என்று இவர் அறிவுரை ஆற்றி வந்தார்.

இந்துக்களில் சிலர் இவரை மகா விஷ்ணுவின் ஒரு அவதாரமாகக்கூடக் கருதினார்கள். இன்று உலகின் மக்களில் மூன்றில் ஒரு பங்கினர் பௌத்த மதத்தைச் சார்ந்தவர்கள்.

செய்திகளில் சிறுவர்கள்:

# இளம்வயது விளையாட்டு வீரர்கள்

கல்கத்தா நகரவாசிகள் சென்ற ஜூலை மாதம் எட்டு வயதான மாணவன் ஒருவனுக்கு அமோக வரவேற்பு அளித்தார்கள். அச்சிறுவன் சூர்யசேகரகங்கூலி. போலண்டு நாட்டில் வார்ஸாவில் நடந்த உலக சப்ஜூனியர் சதுரங்கப் போட்டியில் வெண்கலப் பதக்கத்தை இச்சிறுவன் வென்றான். இவன் பதினோறு சுற்றுகளில் எட்டு புள்ளிகளை எடுத்தான். தங்கப்பதக்கம் பெற்ற லெரான் ஆண்டிரியா 8.5 புள்ளிகள் பெற்றான். வெள்ளிப் பதக்கம் பெற்ற சாகோவாலகாவும் எட்டு புள்ளிகளே பெற்ற போதிலும் அவன் ஆட்டத்தில் காட்டிய முறையும் வேகமும் அவனை இரண்டாவது பரிசு பெறச் செய்தது.

போட்டிகள் ஆரம்பமான இரண்டாவது நாளிலே உலக சாம்பியனான காரி கன்னரோஸ் சூர்யாவின் பக்கத்தில் நின்று அவன்தன் எதிரியை 16 நகர்த்தல்களில் மிக எளிதாகத் தோற்கடித்ததைக் கண்டார். சன்னரோஸின் பயிற்சியாளரான எட்டிங் வெல்ட் சூர்யாவைப் பார்த்து இவன் இன்னும் 10, 12 ஆண்டுகளில் உலக சாம்பியனாக விளங்குவான் எனக்கூறினார்.



கல்கத்தாவில் ஸ்காட்டிஷ்சர்ச் காலேஜியட் ஸ்கூலில் மூன்றாவது வகுப்பில் படிக்கும் சூர்யாவின் தந்தை பங்கஜகங்கூலி சோதிடத் தொழில் புரிபவர். தன் மகன் சதுரங்கத்தில் கொண்ட, ஆர்வத்திற்கும் வெற்றிக்கும் அவனது கிரக நிலைகளே காரணம் என அவர் கருதுகிறார். சூர்யாவின் தாய் ஆர்த்தி. அவரது குடும்பத்தினரும் சதுரங்க ஆட்டக்காரர்களே. தாய்வழிப் பாட்டனார் அனில் பாஸ் மல்லிக் தன் பேரன் சூர்யாவுக்கு அவனது மூன்றாவது வயதிலேயே சதுரங்க ஆசையை உண்டாக்கினார். சூர்யா தனது ஐந்தாவது வயதிலிருந்து போட்டிகளில் கலந்து கொள்ளலானான். இதுவரை சூர்யா 27 மாநில அளவுப் போட்டிகளிலும் 37 தேசியப் போட்டிகளிலும் இரண்டு அகில இந்திய ஓப்பன் டோர்னமெண்ட்களிலும் கலந்து கொண்டுள்ளான். உலகப் போட்டியில் வார்ஸாவில் கலந்து கொண்டது. இவனது முதல் தடவையாகும்.

நாலடி இரண்டங்குல உயரமே உள்ள சூர்யாவுக்கு கால்பந்தும் கிரிக்கெட்டும் கூட பிடித்தமான விளையாட்டுக்களே. கணக்கிலும் கெட்டிக்காரன். பைபிளை ஆர்வமுடன் படிப்பவன். அரிய ஞாபகசக்தி படைத்தவன். கணக்குகளை இவன் கம்ப்யூடர் போல நொடியில் போட்டு விடுகிறான் என்று இவனை யாவரும் பாராட்டுகிறார்கள்.

நம்நாட்டு உலக ஜூனியர் சேம்பியன்களான திவ்வியேந்திரபருவா (1978), விஸ்வநாதன் ஆனந்த் (1987) ஆகியோருக்குத் தக்க வாரிசுபோல வரக்கூடியவன் சூர்யசேகர கங்கூலி.

# உங்களுக்கு தெரியுமா?

1. முதன் முதலில் தேயிலையைப் பயிரிட்ட நாடு எது?
2. பால், பாலேடு இந்த இரண்டில் எது அதிக கனமானது?
3. இஸ்லாம் மதத்தில் அடிப்படை ஐந்து அம்சங்கள் என்று எவை கருதப்படுகின்றன?
4. குரானில் ஏசு கிருஸ்து எந்தப் பெயரில் குறிப்பிடப்பட்டுள்ளது?
5. கிருஸ்து என்ற பெயர் எந்தச் சொல்லிலிருந்து வந்தது?
6. ஏசு கிருஸ்து நதிநீரால் ஞானஸ் நானம் செய்யப்பட்டார். **அது** எந்த நதி?
7. 'பெத்லஹாம்' என்ற சொல்லின் பொருள் என்ன?
8. விண்வெளியில் செலுத்தப்பட்ட முதலாவது ரஷ்ய உபகிரகத்தின் பெயர் என்ன? எப்போது செலுத்தப்பட்டது?
9. கிரிக்கெட்டில் மிக அதிக 'சிக்ஸர்'கள் அடித்தவர் யார்? அவர் யாருடைய சாதனையை மிஞ்சினார்?
10. எந்தப் போரில் முதன் முதலாக விஷவாயு பிரயோகிக்கப்பட்டது?
11. மேற்கத்திய இசையின் மூலதேவதையாக யாரைக் குறிப்பிடுகிறார்கள்?
12. மையைத் தொட்டு எழுத முதலில் எந்த உபகரணத்தைக் கையாண்டார்கள்?
13. ஆசியாக் கண்டத்தில் மிகப் பெரிய பாலைவனம் எது?
14. கொலம்பஸ் எந்த நாட்டைச் சேர்ந்தவர்?
15. உலோக நாணயங்களுக்கு பதிலாக காகித நோட்டுகளை உபயோகித்த முதலாவது நாடு எது?

## விடைகள்

1. சீனா
2. பால்
3. ஆழ்ந்த நம்பிக்கை, தினமும் தொழுகை, தானதர்மம் செய்வது, ரம்ஜான் மாதத்தில் உண்ணாது இருப்பது, மெக்கா யாத்திரை
4. ஈசா
5. 'கிரிஸ்டோஸ்' என்ற கிரேக்கச் சொல்லிருந்து-இதற்கு அபிஷேகம் செய்யப்பட்டவன் என்று பொருள்.
6. இஸ்ரேயில் நாட்டின் ஜோர்டான் நதி
7. தேவகிருகம். இது ஏசு பிறந்த இடம்
8. ஸ்புட்னிக்-1957 அக்டோபர் 4ந்தேதி
9. இவான் போதம் (காமர்செட்) இவர் 1985ல் 80 சிக்ஸர்கள் அடித்தார். 1935ல் 66 சிக்ஸர்கள் அடித்த ஆர்தரி சாதனையை மிஞ்சினார்.
10. முதலாவது உலகப் போரில் இப்ரெசை முதலில் தாக்கிய போது
11. செயிண்ட் சிசிலியா
12. பறவையின் இறகு
13. அரேபியப் பாலைவனம்
14. இத்தாலி
15. சீனா



## எவரஸ்ட் சிகரத்தின் மீது பலூன் பயணம்

சென்ற அக்டோபரில் நான்கு துணிச்சல்காரர்கள் இரண்டு பலூன்களில் அமர்ந்து எவரெஸ்ட் சிகரத்தின் மீது பறந்து போய் திபத்தில் பத்திரமாக இறங்கினார்கள். நேபாளத்திலிருந்து உயரக் கிளம்பி இவர்கள் ஒரு மணி நேரம் பயணம் செய்தனர். ஒரு பலூனில் ஒரு ஆஸ்திரேலியரும் ஒரு ஆங்கிலேயரும் பயணம் செய்தார்கள். மற்ற பலூனில் சென்றவர்கள் இருவருமே ஆங்கிலேயர்கள். பிரிட்டனும் ஆஸ்திரேலியாவும் கூட்டாக ஏற்பாடு செய்த இந்தப் பயணம் 8613 மீட்டர் உயமுள்ள எவரஸ்ட் சிகரத்திற்கு மேல் 300 மீ. உயரத்தில் நடந்தது. இரு பலூன்கள் இவ்வாறு உயரச் சென்று வரலாறு காணாத ஒரு நிகழ்ச்சியை ஏற்படுத்திவிட்டன.

# அம்புலிமாமா செய்திகள்

## விசித்திர அனுபவம்

அமெரிக்காவில் ஒரிகான் விமானக் கூடத்திலிருந்த 'பைபர்கட் சிங்கிள் என்ஜின்' கொண்ட இரு இருக்கை சிறு விமானம் ஒன்றில் பெட்டி ஷார்ப் என்ற இருபது வயது இளம் பெண் விமானத்திலிருந்தபடி போட்டோ எடுக்கச் சென்றாள். அந்த விமானத்தை ஓட்டியவர் 62 வயதானவர். அவளது தந்தையே. ஆனால் திடீரென அவருக்கு நெஞ்சு வலி ஏற்படவே நடு நடுங்கலானார். அதைக் கண்ட பெட்டி ஷார்ப் சற்றும் தயங்காமல் கண்ட்ரோல் பித்தான்களை அமுக்கி விமானத்தை பத்திரமாக இறக்கினாள். இதற்கு முன் அவள் என்றுமே விமானம் ஓட்டியது இல்லையாம்.





# வேண்டாம் இது!

சிதம்பர பாகவதர் புகழ்பெற்ற சங்கீத வித்வான். அவர் கச்சேரி செய்தால் ரசிகர்கள் மெய்மறந்து போவார்கள். நல்ல சாரீரமும் ஞான மும் கொண்டவர். சாஸ்தீரிய சங் கீதத்தில்தான் ஈடுபாடு கொண்ட வர். அவரது புகழைக் கேட்டு அந் நாட்டு மன்னன் மார்த்தாண்டன் அவரைத்தன் தர்பாருக்கு வரவழைத் துக் கச்சேரி செய்யும்படி வேண்டி னான்.

பாகவதரும் நிறைந்த தர்பாரில் இசைக்கச்சேரி செய்தார் மன்ன னும் மற்றும் தர்பாரில் இருந்த அனைவரும் அதனை ரசித்துக் கர கோஷம் செய்தனர். மன்னன் தன் கழுத்தில் அணிந்திருந்த முத்து மாலையை எடுத்து பாகவதர் கழுத் தில் போட்டு. கௌரவித்ததோடு அவரைத்தன் ஆஸ்தான வித்வா னாகவும் நியமித்து விட்டான்.

இதற்குச் சில நாட்களுக்குப் பின் ராணிதன் அந்தப்புரத்தில் பாகவதரின் கச்சேரி நடக்க வேண் டும் என மன்னனிடம் கோரினாள். மன்னனும் பாகவதரைக் கச்சேரி செய்ய அந்தப்புரத்திற்கு அனுப்பி னான். பாகவதர் தன் கச்சேரியை ஆரம்பிக்கும் போதே ராணி எழுந்து "இதெல்லாம் பாட்டா? ஸ்வரமாம்! ராக ஆலாபனையாம்!! எனக்குக் கொஞ்சமும் பிடிக்க வில்லை. இந்த சங்கீதத்தைக் கேட்டா மன்னர் உங்களுக்கு ஆஸ் தான வித்வான் பதவிடை அளித் தார்? நாட்டுப் பாடல், டப்பாங் குத்து என்றெல்லாம் பாடத் தெரி யாதா?" என்றாள்.

பாகவதருக்கு என்ன செய்வ தென்றே தோன்றவில்லை. அவர் மன்னரைக் கண்டு ராணியின் விருப்பத்தைத் தெரிவித்தார்.

-எஸ். கிருஷ்ணசாமி-



மன்னனும் "ராணி என்ன விரும்பு கிறாளோ அப்படி நீங்கள் பாடித் தான் ஆக வேண்டும்" என்றார். பாகதரும் "அப்படிப் பாட என் மனம் ஒப்பவில்லை. அதனால் இப்போதே என்பதவியை விட்டு விடுகிறேன்" என்றார்.

மன்னனோ "பதவியை விட்டு உம் இஷ்டப்படி விலகமுடியாது. நான் இந்நாட்டு மன்னன். நீங்கள் ராணியின் விருப்பப்படி அந்த ரகப் பாடல்களைப் பாடுவதோடு இனி என் தர்பாரிலும் அதே ரகப் பாடல்களைத்தான் பாடவேண் டும். இது என் கட்டளை" எனக் கூறினான்.

பாவதர் நொந்து போனார். முன் போல தன் இஷ்டம் போலக் கீர்த் தனைகளைப் பாடி மக்களை மகிழ் விக்க முடியாமல் ஆஸ்தான வித் வான் பதவியை ஏற்று தன் சுதந்திரத் தைப் பறிகொடுத்து விட்டதைப் பற்றி வருந்தினார். ராணியின் விருப்பப்படி ஒரு வாரத்தில் பாடல் களைப் பாடுவதாகவும் கூறினார்.

ஒருவாரமானதும் ராணியின் அந்தபுரத்தில் சிதம்பர பாகவத ரின் கச்சேரிக்கு ஏற்பாடாகியது. அவர் நாட்டுப் பாடல்களையும் டப்பான் குத்துப் பாடல்களைப் பாடினார். ராணியும் அவளது பணிப்பெண்களும் தாளம் போட் டார்கள் 'உய்', 'உய்' என்று கீச் சுக் குரலில் கத்தி மகிழ்ச்சி ஆரா வாரம் செய்தார்கள். இதற்குப் பின் பாகவதர் தர்பாரில் பாடிய போதெல்லாம் நாட்டுப் பாடல் களையும் டப்பான்குத்துப் பாடல் களையும் மட்டுமே பாடவேண்டிய தாயிற்று. நல்ல சர்கித்தியங்களை கர்நாடக சங்கீதக் கச்சேரி வடி வில் பாடவே முடியவில்லை.

இதற்கு இரண்டு மாதங்களுக் குப்பின் அந்நாட்டிற்கு சுப்பராம பாகவதர் என்பவர் வந்தார். அவர் மார்த்தாண்ட மன்னனைக் கண்டு "அரசே! நான் பலநாடுகளில் சென்று அங்குள்ள சங்கீத வித்வான் களுடன் போட்டி போட்டு அவர் களை எல்லாம் வென்று பதக்கங் களும் தோடாக்களும் பரிசுகளாகப் பெற்று வந்திருக்கிறேன். தங்கள்

நாட்டில் என்னை வெல்லக் கூடிய வர் யாராவது இருக்கிறாரா? இருந் தால் என்னோடு போட்டி போட ஏற்பாடு செய்யுங்கள். நாளையே போட்டி நடந்தாலும் அதற்கு நான் தயார். போட்டியில் நான் தோற்றுவிட்டால் இதுவரை நான் அடைந்த பதக்கங்களையும் தோடாக் களையும் அந்த வித்வானின் காலடி யில் வைத்து விட்டு அவரது அடிமை யாகிறேன். நான் வென்றால் இது வரை நான் பெற்ற பரிசுகளை விட மிக விலையுயர்ந்த பரிசை அளித்து என்னை கௌரவிக்க வேண்டும். இதுநான் உங்கள் நாட்டிற்கு விடுக் கும் சவால்'' என்றார்.

மன்னன் திகைத்துப் போனான். அயல் நாட்டிலிருந்து வந்து ஒரு சங்கீத வித்வான் சவால் விடுகிறார் என்றால் அதற்குத் தக்க பதிலடி கொடுத்தால் தானே நாட்டின் கௌரவம் நிலைக்கும். இல்லாவிட்டால் நாட்டிற்கே பெருத்த அவமானம்! சவால் விட்ட பாக வதருடன் போட்டி போட சிதம் பர பாகவதரிடம் தான் வேண்ட வேண்டும்.

மன்னன் சிதம்பர பாகவதரைக் கண்டு "நீங்கள் தாம் சுப்பராம பாகவதருடன் சாஸ்திரீய சங்கீதத் தில் போட்டி போட வேண்டும்'' என்று வேண்டினான்.

அப்போது சிதம்பரபாகவதர் "நான் தர்பாரில் நாட்டுப் பாடல் களையும் டப்பான் குத்துப் பாடல் களையும் மட்டுமே பாட வேண் டும் என்று நீங்கள்தானே கட்டளை இட்டீர்கள். ராணியார் சொன்ன



தைக் கேட்டு இந்தப் பாடல்களை மட்டுமே என்னைப் பாட வைத்திருக்கும் நீங்கள் இப்போது வந்திருக்கும் வித்வானிடமும் ராணி விரும்புவதைக் கூறி அந்தரகப் பாடல்களில் தான் போட்டி என்று கூறி இருக்கலாமே. தர்பாரில் கர்நாடக சங்கீதத்திற்கே இடமில்லை என்று அவரிடம் தெரிவித்திருக்கலாமே'' என்றார்.

மன்னன் தலைகுனிந்து கொண்டான். பிறகு அவன் ''ராணியின் பேச்சைக் கேட்டு அப்படிக் கட்டளை இட்டது தவறுதான். இப்போதைய நிலையில் நீங்கள் தாம் நாட்டின் மானத்தைக் காக்க வேண்டும்'' என்றார். பாகவதரும் ''நீங்கள் கட்டளை இடுகிறீர்கள். அதன்படி கர்நாடக சங்கீதப் போட்டிக்கு நான் தயாராகிறேன். இது நாட்டின் கௌரவப் பிரச்னை. தரமான சங்கீதத்தில் உயர்வானது எது என்று நிர்ணயிக்கும் போட்டி. எனவே சங்கீதம் எது என்பதை அறிந்து கொள்ள ராணியையும் போட்டியின் போது வந்து கேட்கச் சொல்லுங்கள்'' என்றார்.

மறுநாள் போட்டி ஆரம்பமாகியது. சிதம்பரபாகவதரின் இசை முன் சுப்பராம பாகவதரின் இசை எடுபடவில்லை தம் தோல்வியை அவர் ஒப்புக் கொண்டார். மன்னன் சிதம்பர பாகவதரை மனதாரப் பாராட்டினான். சுப்பராம பாகவதரும் தாம் அதுவரை பெற்ற பதக்கங்களையும் தோடாக்களையும் சிதம்பர பாகவதரின் காலடியில் வைத்து வணங்கி நின்றார்.

சிதம்பர பாகவதரும் மன்னனிடம் ''போட்டியில் வென்றாகி விட்டது நல்ல இசை எது என்பதும் யாவருக்கும் தெரிந்து விட்டது. அதற்கு அத்தாட்சி இன்று ரசிகர்கள் கூடி என் இசையை ரசித்தது தான்'' என்றார். அன்றிரவே சிதம்பர பாகவதர் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் எங்கோ போய் விட்டார்.





# பட்டால் தெரியும்!

வசந்தா கல்யாணமாகிக் குடித் தனம் செய்ய வந்தபோது வீட்டின் நிலைமையைக் கண்டாள். தினமும் தன் கணவனின் தங்கை ஒரு தட்டில் உணவை எடுத்துக் கொண்டு எங்கோ போய்விட்டு வருவதை அவள் கவனித்தாள். ஒரு நாள் அவளிடம் வசந்தா "நீ தினமும் எங்கே போய்விட்டு வருகிறாய்?" என்று கேட்டாள். அவளும் "பாட் டிக்குத்தான் சாப்பாடு கொண்டு போய்க் கொடுக்கிறேன்" என்றாள்.

"பாட்டி என்றால்?" என்று வசந்தா கேட்கவே அந்தப் பெண் ணும் "அப்பாவைப் பெற்ற அம்மா. என் அம்மாவின் மாமியார்" என் றாள். வசந்தாவும் "உன் பாட்டி எங்கே இருக்கிறாள்? ஏன் இங்கே இல்லை?" என்று கேட்கவே அப் பெண்ணும் "அதெல்லாம் நீ அவளிடமே கேட்டுத் தெரிந்து கொள். உன்னை நான் அவள் இருக்கும் இடத்திற்கு அழைத்துச் செல்கிறேன்" என்றாள்.

மறுநாள் வசந்தா அந்தப் பெண்ணுடன் அவளது பாட்டியைக் காணச் சென்றாள். அந்தக் கிழவி ஒரு மூலையில் முடங்கிக் கிடந் தாள். அவளைக் கண்டதும் வசந் தாவின் மனம் இளகியது. அந்தக் கிழவியும் தன்னருகே இருந்த தட்டை நகர்த்தி முன்னால் வைக் கவே அதில் அவள் பேத்தி தான் கொண்டு வந்த உணவைப் போட் டாள். வசந்தா அக்கிழவியின் அரு கில் போய் அவளது கால்களைத் தொட்டுக் கும்பிட்டாள்.

கிழவியும் அவளை ஆசீர்வதித்த வாறே "ஓ! நீதான் என் பேரனின் மனைவியா?" என்று கேட்கவே வசந்தாவும் ஆம் என்று கூறித் தலையை ஆட்டினாள். கிழவியும்

—பாபநாசம் சாமா—



"தங்கச் சிலை போல இருக்கிறாய். இனிமேல் நீதான் என் பேரனை நன்றாக கவனித்துக் கொள்ள வேண்டும்" என்றாள்.

அப்போது கிழவியின் பேத்தி வசந்தாவிடம் "நாம் இங்கிருந்து சீக்கிரம் போய்விட வேண்டும். நீங்கள் இங்கே வந்து பாட்டியைக் கண்டதை அம்மா அறிந்தால் கோபித்துக் கொள்வாள்" என்றாள். வசந்தாவும் உடனே அவளுடன் கிளம்பினாள். வழியில் அவள் அப்பெண்ணிடம் "உன் பாட்டி ஏன் ஒரு மாட்டுக் கொட்டிலில் ஆடு மாடு போல இருக்க வேண்டும்? நம் வீட்டிற்கு ஏன் வரக்கூடாது?" என்று கேட்டாள்.

அந்தப் பெண்ணும் "பாட்டிக்கு எலும்புருக்கி நோயாம். அவள் இருமினால் அந்த நோய் வீட்டிலுள்ள மற்றவர்களுக்கும் பரவி விடுமாம். அதனால்தான் அம்மா பாட்டியை இங்கே தனியாக வைத்திருக்கிறாள்" என்றாள்.

இதற்கு மறுநாள் பார்வதியின் தாயாருக்கு உடல்நிலை சரி இல்லை என்ற தகவல் வரவே பார்வதி தன் தாயாரைக் காணக் கிளம்பிப் போய்விட்டாள். வீட்டுப் பொறுப்பை வசந்தாவிடம் ஒப்படைத்திருந்தாள்.

இரண்டு நாட்களுக்குப் பின் வசந்தாவின் அண்ணன் அவளைக் காண வந்தான். அவன் ஒரு கை தேர்ந்த வைத்தியன். வசந்தா அவளிடம் கிழவியைப் பற்றிக் கூறவே அவனும் கிழவியைப் பரீட்சித்துப் பார்த்துவிட்டு "இவளுக்கு ஒரு நோயும் இல்லை. பலஹீனத்தால் இருமுகிறாள். நான் மருந்து கொடுக்கிறேன். மூன்றே நாட்களில் உடம்பு தேறிவிடும்." என்று கூறி மருந்தும் கொடுத்தான். மூன்றே நாட்களில் உடம்பு தேறிவிட்டது. இருமல் இல்லை. அவள் அந்தக் கொட்டிலிலிருந்து போய் நல்ல இடத்தில் இனி இருக்க வேண்டும் எனக் கூறினான்.

வசந்தா தன் கணவனிடம் அவனது பாட்டியின் உடல்நிலை பற்றிக்கூறி அவளை வீட்டிற்கு அழைத்து வரச்செய்தாள். கிழவியை அவள்

நன்கு கவனித்தும் வந்தாள். வசந்தா வின் அண்ணனும் இரண்டு குளிகை களை அவளிடம் கொடுத்து அவள் என்ன செய்ய வேண்டும் என்று கூறிவிட்டுச் சென்றான்.

பதினைந்து நாட்களுக்குப் பிறகு தான் பார்வதி ஊர் திரும்பினாள். தன் மாமியார் உடல்தேறி வீட் டிற்கு வந்து இருப்பதைக் கண்டு அவள் திகைத்துப் போனாள். அவள் உரத்த குரலில் "யார் இவரை இங்கே கொண்டு வந்தது?" என்று கத்தினாள்.

வசந்தா தன் மாமியாரைச் சமா தானப் படுத்தியவாறே "என் அண் ணன் வந்து இவருக்கு மருந்து கொடுத்து நோயைப் போக்கி விட் டார். அதனால் இங்கே அழைத்து வந்துவிட்டோம்" என்றாள். பார் வதிக்கு அதற்கு மேல் எதுவும் கேட்கவோ பேசவோ தெரிய வில்லை.

அன்று பார்வதி சாப்பிடும் போதே வசந்தா தன் அண்ணன் கொடுத்த குளிகைகளில் ஒன்றை அவன் கூறி இருந்தபடி நீரில் கரைத்து குடிக்க கொடுத்தால். பார்வதி அதைக் குடித்த ஒருமணி நேரத்திற்கெல்லாம் 'லொக்' 'லொக்' என்று இரும ஆரம்பித்தாள் அந்த இருமல் நிற்கவே இல்லை. தொடர்ந்து மணிக்கணக்கில் இரும லானாள்.

அதைக் கண்ட வசந்தா "என்ன



இது? ஊருக்குப் போய் இந்த நோயை வரவழைத்துக் கொண்டு விட்டீர்களோ? உங்கள் மாமியாரை போல இருமுகிறீர்களே. இனிமேல் உங்கள் அருகே யாரும் போகக் கூடாது. ஏனென்றால் அவர்களுக் கும் இந்த நோய் பரவிடும். நீங்க ளும் உங்கள் மாமியார் இருந்தது போல அந்த மாட்டுக் கொட்டி லில் இருங்கள். தினமும் சாப்பாடு அனுப்புகிறேன்" என்றாள்.

பார்வதி முடியாது எனக் கூறி யும் அதனை ஏற்காமல் வசந்தா அவளை மாட்டுக் கொட்டிலுக்கே அனுப்பி விட்டாள். அன்று அவ ளுக்கு அவள் மகள் உணவு கொண்டு வரவே அவளிடம் "நான் இங்கே இருக்க முடியாது. என்னை வீட்

டிற்கு அழைத்து போ'' என்றாள்.

அப்போது அங்கே வந்த அவளது கணவன் "பார்வதி! நீ கற்பித்த பாடத்தைத்தான் உன் மருமகள் கற்று உன்னை இங்கே அனுப்பிவிட்டாள். நீ நல்லது செய்திருந்தால் உனக்கும் நன்மையே கிட்டிஇருக்கும். நீ உன் மாமியாரைத் துன்புறுத்தினாய். உன் மருமகளும் நீ செய்தது போலத்தான் செய்கிறாள்'' என்றான். பார்வதி வாயடைத்துப் போனாள்.

மூன்று நாட்கள் கழிந்தன. பார்வதி அந்தக் கொட்டிலில் இருந்தாள். ஆனால் எந்த உணவும் உண்ணவில்லை.· தண்ணீர் கூடக்குடிக்கவில்லை. அவள் பல முறை என் மாமியார் எப்படித் தான் இருந்தாரோ என்று எண்ணி பச்சாத்தாபப் படலானாள்.

நான்காவது நாள் வசந்தா தன் கணவனோடு தன் மாமியாரைக் காண மாட்டுக் கொட்டிலுக்கு வந்தாள். நினைவிழந்து கிடக்கும் பார்வதியை அவர்கள் தன் வீட்டிற்குத் தூக்கிச் சென்றார்கள். அவள் கண் விழித்தும் அவள் மகன் "அம்மா! நீ அந்தக் கொட்டிலில் என்ன பாடுபடுகிறாயோ என்று கூறி பாட்டிதான் உன்னை இங்கே அழைத்து வரச் சொன்னாள். அதனால்தான் உனக்கு நோய் இருந்தும் தூக்கிக் கொண்டு வந்துவிட்டோம்'' என்றான்.

அதைக்கேட்ட பார்வதியும் கண்ணீர் உகுத்தவாறே "ஆமாம் கஷ்டங்கள் என்ன என்று பட்டால் தானே தெரியும்" என்றாள். வசந்தா தன் அண்ணன் கொடுத்த மற்ற குளிகையை நீரில் கரைத்து அதைக் குடிக்கப் பார்வதியிடம் கொடுத்தாள். அடுத்த சில நிமிடங்களில் அவளது இருமல் நின்று விட்டது. அப்போது அவள் "அத்தை? உங்கள் இருமல் நின்று விட்டது. இனி எல்லோருடனும் சேர்ந்து நீங்களும் சுகமாக இருக்கலாம்'' என்றாள். பார்வதி புன்சிரிப்பை உதிர்த்தாள்.






இராவணனின் தர்பாரில் இராமரின் படை எடுப்பை எதிர்க்க நடந்த ஆலோசனையில் அதுவரை பேசியவர்கள் எல்லோரும் போர் பற்றியே பேசினார்கள். அப்போது இராவணனின் தம்பி விபீஷணன் எழுந்து தன் அண்ணனை வணங்கி விட்டுக் கூறலானான்.

"பிரச்னை எதையும் தீர்க்க சாம, தான, பேதம் என்ற மூன்று உபாயங்களையும் கையாண்டு விட்டு அவற்றால் தீர்க்க முடியாமல் போனாலே கடைசியில் தண்டோபாயத்தைக் கையாள வேண்டும். இராமரின் பலத்தைக் குறைவாக மதிப்பிட வேண்டாம். அனுமார் ஒருவர் மட்டும் இங்கு வந்து இலங்கையையே கதிகலங்க வைத்தார் என்றால் கடவுள் அவர் பக்கமே இருக்கிறார் என்பது தெளிவு. இராமர் கரன், தூஷணன் போன்ற அரக்கர்களைக் கொன்றதற்காக நீங்கள் சீதையைக் கவர்ந்து வந்து சிறை வைத்தது தவறு. இராமர் தன்னைக் காத்துக் கொள்ளவே தாக்க வந்தவர்களைக் கொன்றார். சீதையைச் சிறைபிடித்து நாம் வீண் விரோதத்தைத்தான் வளர்த்திருக்கிறோம். இதனால் நமக்கு ஆபத்தே. நாம் சீதையை இராமரிடம் ஒப்படைத்து விடுவோம். இதனால் இலங்கையை அழிந்து போகாமல் நாம் தடுக்க முடியும். இராமர் பராக்கிரமசாலி என்பதை நினைவில் கொண்டு போர் புரியும் எண்ணத்தை விட்டு அவரோடு சமா



தானமாகப் போய் விடுவோம்''

இவ்வாறு விபீஷணன் கூறியது இராவணனுக்குச் சற்றும் பிடிக்கவில்லை. அவன் கோபத்தோடு ''நான் யாரிடமும் பயப்படமாட்டேன். இராமனால் சீதையை என்னிடமிருந்து மீட்டுச் செல்ல முடியாது. தேவர்களையே ஆட்டி வைத்தவன் நான் என்பதை நீ அறியாயோ?'' என்று உறுமினான். அன்றைய தர்பார் கலைந்தது.

மறுநாள் போர்பற்றிய திட்டங்களை வகுக்க இராவணன் தன்னை அலங்கரித்துக்கொண்டு தேரில் ஏறிவந்தான். அவன் பின்னால் ஆயுதங்கள் தரித்த பல அரக்கங்கள் வந்தார்கள். அதற்கு முன்பே ராட்சஸப் பிரமுகர்கள் வந்து தம் ஆசனங்களில் அமர்ந்திருந்தார்கள்.

இராவணன் வந்து சிம்மாசனத்தில் அமர்ந்து சுற்றிலும் ஒருமுறை பார்த்தான். யாரும் எதுவும் பேசவில்லை. எங்கும் அமைதி நிலவியது. எல்லோரும் இராவணன் என்ன சொல்லப் போகிறான் என்பதைக் கேட்கத் தயாராக இருந்தார்கள். இராவணனும் பிரஹஸ்தனைப் பார்த்து ''படைத் தலைவா! நம் நகரைப் பாதுகாக்கத் தக்க ஏற்பாடுகளை செய்'' என்று கட்டளை இட்டான்.

பிரஹஸ்தனும் அவ்வாறே செய்வதாகக் கூறி இன்னும் என்ன செய்ய வேண்டும் என்றும் கேட்டான். இராவணன் தர்பாரில் உள்ளவர்களைப் பார்த்துக் கூறலானான்.

''நாட்டுக்கு ஆபத்து என்று வரும் போது அதனை எவ்வாறு தடுத்து நிறுத்துவது என நீங்கள் நல்ல யோசனைகளைக் கூற வல்லவர்கள். உங்கள் யோசனைகள் நற்பயன்களையே அளித்து வந்திருக்கின்றன. நான் சொல்லப் போவது என் தம்பி கும்பகர்ணனைத் தவிர மற்ற எல்லோருக்கும் தெரிந்ததே. அவன் கடந்த ஆறு மாதங்களில் தூங்கிவிட்டு இன்றுதான் இங்கு வந்திருக்கிறான். நான் தண்டகாரணியத்திலிருந்து சீதையைக் கவர்ந்து வந்தேன். இராமன் தன் படையோடு எதிர்க்கரையில் முகா



மிட்டிருக்கிறான். நான் சீதையை ஒப்படைக்காது போனால் உங்களால் அவனை வெல்ல முடியும் அல்லவா? அவனது படை கடலைக் கடந்து இங்கே வந்து விடுமா?''

இராவணன் இவ்வாறு கூறியதைக் கேட்டு கும்பகர்ணன் கடும் கோபம் கொண்டான். அவன் இராவணனைப் பார்த்து "நீ சீதையைக் கவர்ந்து வருமுன் அது பற்றி யாரிடமாவது யோசனை கேட்டாயா? இப்போது மட்டும் எங்களிடம் ஏன் கேட்கிறாய்? உனது செயல் கண்கெட்ட பின் சூரிய நமஸ்காரம் செய்வதைப் போல இருக்கிறது. சீதையைக் கவர்ந்து வந்தது எவ்வளவு ஆபத்தானது என்பதை நீ அறியவில்லை. ஆனாலும் கவலைப்படாதே. நான் உனக்கு உற்ற துணையாக இருந்து எதிரிகளை அழிக்கிறேன்.'' என்று கூறினான்.

கும்பகர்ணன் கூறியது கேட்டு இராவண்னின் முகம் வாட்டம் அடைந்ததை மகாபார்சுவன் கவனித்தான். அவன் இராவணனைப் பார்த்து "நீங்கள் சீதையை கவர்ந்து வந்ததால் ஆபத்து வந்து விட்டது என்று கவலைப்பட வேண்டாம். நீங்கள் ஆணையிட்டால் போதும். நாங்கள் எல்லாம் எதையும் பாது காக்கத் தயாராக இருக்கிறோம். உங்களுக்குத் துணையாக கும்பகர்ணனும் இந்திரஜித்தும் இருக்கையில் ஏன் கவலை? அந்த தேவேந்திரனே வந்தாலும் உங்களை அசைக்க முடியாது'' என்றான்.

அதைக்கேட்டு இராவணன் மகிழ்ந்து மகாபார்சுவனிடம் "நீ சொல்வது சரியே. ஆனாலும் என் மனம் சற்று வாட்டமே அடைகிறது. ஏனென்றால் ஒருமுறை நான் ஒரு அப்சரப் பெண்ணை அவளது விருப்பத்திற்கு மாறாக அடைய முயன்றேன். அவள் ஓடிப்போய் பிரம்மதேவனிடம் அதைக்கூறவே அவரும்'' நீ மட்டும் எந்தப் பெண்ணையாவது அவளது விருப்பத்திற்கு மாறாக அடைய முயன்றால் உன்தலை சுக்குநூறாக வெடித்து விடும்'' என்று சபித்துவிட்டார். அதனால்தான் சீதையைத் தொடாமல் என் வழிக்கு கொண்டுவர முயல்



கிறேன். இராமன் என்பலத்தை அறியாமல் என்னுடன் மோதப் பார்க்கிறான். அவன்தானே மரணத் தின் வாயில் விழவந்து கொண்டி ருக்கிறான்'' என்றான்.

அவர்கள் கூறியதைக் கேட்ட விபீஷணன் ''இலங்கேஸ்வரா? நீ ஏன் இந்த சீதை மீது நாட்டம் கொண்டாய்? அவளை நீ கொண்டு வந்தது. ஒரு விஷப் பாம்பை நீ கையில் எடுத்துக் கொண்டது போலத்தான். அது படம் எடுத்து சீறித் தீண்டிவிடும். அது போலத் தான் சீதையும். எனவே நீ அவளை இராமரிடம் ஒப்படைத்து விடு. உன் னைக் கும்பகர்ணனாலோ இந்திர ஜித்தாலோ அல்லது இந்த மகா பார்சுவனாலோ இராமரிடமிருந்து காக்க முடியாது. இதைத் தெரிந்து கொள்'' என்றான்.

பிரகஸ்தனோ இராவணனை யாராலும் வெல்லமுடியாது என்று கூறினான். இந்திரஜித்தோ விபீ ஷணன் பூச்சாண்டி காட்டுகிறான் எனக் கேலிசெய்தான். இராமனைக் கொல்ல இலங்கையிலுள்ள எந்த ஒரு ராட்சஸனாலும் முடியும் எனக் கருவினான். இந்திரனை வென்ற வனானதான் இருக்கையில் இராவ ணன் யாருக்கும் பயப்பட வேண்டிய தில்லை என்று அவன் கர்ஜித் தான்.

விபீஷணனோ ''மகனே! நீ இப்படிக் கூறுவது ராட்சஸ குலத் திற்கே நன்மை விளைவிக்காது. இராமரின் அம்பிற்கு முன் யாரா லும் நிற்க முடியாது. எனவே சீதையை இராமரிடம் ஒப்படைப் பதுதான் எல்லா விதத்திலும் நல் லது'' என்று கூறினான்.

இராவணனால் விபீஷணன் கூறியதைச் சகிக்க முடியவில்லை. அவன் விபீஷணனைப் பலவாறு திட்டி ''நீ என் தம்பி என்பதால் உன்னை விட்டு வைக்கிறேன். இப் படி வேறு எவனாவது கூறி இருந் தால் அவனது தலை தரையில் உருண்டிருக்கும்'' என்றான்.

விபீஷணனுக்கும் கோபம் வந்து விட்டது. அவன் இராவணனைப் பார்த்து ''நீ எனக்கு அண்ணன். தந்தைக்குச் சமமானவன். உன்

நன்மைக்காகத்தான் நான் இவ்வளவும் கூறினேன். ஆனால் நான் சொன்னது உனக்கு எதுவும் பிடிக்கவில்லை. உன் மனம் குளிரப் பேசுபவர்கள் பலர் இருக்கிறார்கள். நான் என் மனதில் பட்டதைக் கூறி உன் மனதைத் துன்புறுத்தி விட்டேன். அதற்காக என்னை மன்னித்து விடு. நான் உன்னைவிட்டுப் பிரிந்து போகிறேன். நீ சுகமாக இரு. நீ உன்னையும் இலங்காபுரியையும் காத்துக் கொள்'' என்று கூறிவிட்டு அங்கிருந்து சென்று விட்டான்.

விபீஷணன் தன்னுடன் நான்கு இராட்சஸர்களை அழைத்துக் கொண்டு ஆகாய வழியாக இராமர் இருக்கும் இடத்திற்குச் சென்றான். அந்த ஐவரும் ஆகாய வழியாய் வருவதை வானரர்கள் பார்த்தார்கள். வருபவர்கள் இராவணனின் ஒற்றர்களோ என்று சுக்கிரீவன் சந்தேகித்தான். அதனை அவன் அனுமாரிடமும் கூறினான். வானரர்களோ ராட்சஸர்கள் தம்மைத் தாக்க வருகிறார்கள் என்று நினைத்து மரக்கிளைகளை ஒடித்து எடுத்துக் கொண்டு நின்றனர்.

விபீஷணன் தன் சகாக்களுடன் இராமர் இருக்கும் இடத்திற்கு மேல் ஆகாயத்தில் சுற்றிக் கொண்டிருந்தான். அவன் அங்கிருந்தபடியே சுக்கிரீவனையும் மற்ற வானரர்களையும் பார்த்து உரத்த குரலில் கூறலானான்.

''நான் இராவணனின் தம்பி விபீஷணன். அவனது கொடிய செயல்களைக் கண்டித்து விட்டு





இலங்கையிலிருந்து வெளியேறி வந்தவன். ஜனஸ்தானத்திலிருந்து சீதையைக் கவர்ந்து கொண்டு இராவணன் வருகையில் ஜடாயு அவனை எதிர்க்கவே அவனைக் கொன்ற பாவி என் அண்ணன். நான் அவனுக்கு அறிவுரை கூறி சீதையை உங்களிடம் ஒப்படைத்து விடும்படிச் சொல்லிப் பார்த்தேன். அவன் அதனை ஏற்காமல் என்னைப் பலவிதமாகத் திட்டினான். நான் மனம் நொந்து இலங்கையிலிருந்து வெளியேறி உங்களிடம் சரணடைய வந்திருக்கிறேன்.''

அதைக்கேட்ட சுக்கிரீவன் ''இவன் இராவணனின் தம்பி விபீஷணன். தங்களிடம் சரண் கோரி வந்திருக்கிறான். அவனோடு நான்கு ராட்சஸர்கள் இருக்கிறார்கள். ராட்சஸர்கள் மாயாஜாலக் காரர்கள். அவர்களை நம்பக்கூடாது. ஒருவேளை இராவணன் இவர்களை வேவு பார்க்க அனுப்பி இருக்கலாம். எதிரிகளிடமிருந்து வரும் இவர்கள் நம்மிடையே பிளவு ஏற்படுத்தவும் முயலலாம். எனவே இவன் சொல்வதை எப்படி நம்ப முடியும்? இவர்களைப் பிடித்துக் கொன்று விட வேண்டும்'' என்று இராமரிடம் கூறினான்.

சுக்கிரீவன் கூறியதைக் கேட்ட பின் இராமர் அங்கிருந்த அங்கதன், ஜாம்பவான், அனுமார் முதலியவர்களைப் பார்த்தார். அவர் ''நீங்கள் எல்லோரும் சுக்கிரீவன் சொன்னதைக் கேட்டீர்கள் அல்லவா? உங்களது அபிப்பிராயம் என்ன என்று ஒவ்வொருவராகச் சொல்லுங்கள்'' என்றார்.

அங்கதனும் ''என்னதான் இருந்தாலும் எதிரியின் பக்கத்திலிருந்து வரும் ஒருவனைக் கண்ணை மூடிக்கொண்டு நம்பிவிட முடியாது. முதலில் விபீஷணன் எதை மனதில் நினைத்துக் கொண்டு இங்கு வந்திருக்கிறான் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்'' என்றான்.

சரபேனா ''இந்த ராட்சஸர்கள் என்ன செய்கிறார்கள் என்பதைக் கண்காணிக்க நாம் ஒரு சிலரை அனுப்ப வேண்டும்'' என்றான்.

ஜாம்பவானோ "இவனோ எதிரியிடமிருந்து வருபவன். இப்படிப் பட்டவனை சந்தேகிக்கத் தானே முடியும்? இவன் நம்மை நாடி வருவது நம்மை வேவு பார்க்கத்தான் என்பதில் சந்தேகமே இல்லை" என்றான்.

மைந்தனோ "நாம் விபீஷணனிடம் இராவணனைப் பற்றி விசாரித்துப் பார்ப்போம். அவன் சொல்லும் பதிலிலிருந்து அவன் எப்படிப்பட்டவன் என்று அறிந்து கொண்டு விடலாம்" என்றான்.

அப்போது அனுமார் "இவர்களெல்லாம் கூறியது போல விபீஷணனைப் பரீட்சித்துப் பார்க்க வேண்டும் என்பது சரி என்று எனக்குத் தோன்றவில்லை. அவனோடு பழகினால்தான் அவன் நல்லவனா அல்லது கெட்டவனா என்பது தெரியும். இது முன்னதாகவே நம்மால் அறிந்து கொள்ள முடியும் என நினைப்பது தவறு.

அவர்களைக் கண்காணித்தால் மட்டும் என்ன தெரிந்து விடப் போகிறது? எதிரியிடமிருந்து வருபவனைச் சந்தேகிக்கத்தான் வேண்டும் என நினைப்பதும் தவறு. இடம், காலம், ஏவல் இவற்றால் உந்தப்பட்டு விபீஷணன் இங்கு வந்திருக்கிறான். அவன் இராவணனுக்கு அறிவுரை வழங்கி இருக்கிறான். உங்கள் பலத்தை எடுத்துக் கூறி இருக்கிறான். இதற்கெல்லாம் அவன் இராவணனின் வசைகளை வாங்கிக் கட்டிக் கொண்டு அவமானப் பட்டு வந்திருக்கிறான். விபீஷணன்தான் சரணடைய வந்திருப்பதாகத் தெளிவாகக் கூறிவிட்டான். அதை நாம் நம்பலாம். அவன் பேச்சில் ஒளிவு மறைவு இல்லை. வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு நீங்கள் நாட்டை அளித்தது போல இராவணனைக் கொன்று விபீஷணனுக்கும் மகுடம் சூட்ட லாம். எனவே விபீஷணனை வரவேற்று ஏற்பதே நல்லது" என்றார்.





# ஆசைக்கு அளவில்லையா!

வெகு காலத்திற்குமுன் சுவாங் நாட்டில் புகழ் பெற்ற ஒரு சிற்பி இருந்தான். அவனுக்கு தேவதையின் அருள் உண்டு. ஒரு நாள் அந்த சிற்பியை ஒரு பணக்காரன் தன் வீட்டில் ஒரு சிலை செய்ய அழைத்தான். சிற்பி பணக்காரனின் வீட்டிலுள்ள ஆடம்பரப் பொருள்களைக் கண்டு மலைத்துப் போனான்.

அவன் தன் தேவதையை நினைத்துக் கொண்டு தானும் அப்பணக்காரனைப் போல் மாளிகைவாசியாகிவிட வேண்டும் என விரும்பினான். தேவதையும் அவன் விருப்பத்தை நிறைவேற்றியது. பணக்காரனான சிற்பி மகிழ்ந்து போனான். தான் தொழில் செய்வதையும் விட்டு விட்டான்.

கொஞ்ச நாட்களுக்குப் பின் ஒரு அரசாங்க அதிகாரி அவனது ஊருக்கு வந்தார். ஊரார் எல்லாம் அவருக்கு மரியாதை செலுத்தினார்கள். சிற்பி அவரை வணங்காததால் அவர்தன் ஆட்களை விட்டு சிற்பியை செம்மையாக உதைத்து அடித்தனர். சிற்பி அப்போது தேவதையை நினைத்து "நான் பணக்காரனாக இருப்பதை விட அரசாங்க உயர் அதிகாரியாக இருக்க விரும்புகிறேன்" என்றான். தேவதையும் அவனுக்கு அப்படிப்பட்ட பதவி கிடைக்கச் செய்தது.

அதிகாரியாக விட்ட சிற்பிதன் ஆட்களுடன் ஒரு மலைப்பகுதிக்குச் சென்றான். அங்கு சில அழகிய பெண்களைக் கண்டு அவர்களைத் துரத்தி இம்சிக்கலானான். அப்பெண்கள் போட்ட கூச்சலில் மலைச்சாதி மக்கள் ஓடிவந்து சிற்பியையும் அவனது ஆட்களையும் அடித்து வீழ்த்திப் பெண்களைக்

—சுவாங் நாடோடிக் கதை—

காப்பாற்றி அழைத்துக் கொண்டு போனார்கள்.

அப்போது சிற்பி "நான் அதிகாரியாக இருப்பதை விட ஒரு மலைச்சாதியினனாக இருப்பதே மேல்" என நினைத்தான். உடனே அவனது தேவதை அவனை ஒரு மலைச்சாதியினனாக மாற்றிவிட்டது. ஒருநாள் உச்சி வெயிலில் அவன் வயலில் வேலை செய்த போது சூரியனை மேகம் மறைத்து வெயிலைத் தணித்தது. அதைக் கண்ட சிற்பிதான் மேகமாக இருப்பது மேல் என நினைக்க அவனது தேவதையும் அவனை ஒரு மேகமாக மாற்றியது.

மேகத்தைக் காற்று பலமாக இழுத்துச் செல்லவே மேகமாக இருந்த சிற்பி தான் காற்றாக மாற வேண்டும் என நினைத்தான். மறு நிமிடமே அவனது தேவதை அவனைக் காற்றாக மாற்றியது. காற்றாகிவிட்ட சிற்பிவேகமாகச் செல்கையில் அவனை ஒரு பெரிய பாறை தடுத்து நிறுத்தியது. அது கண்டு சிற்பிதான் காற்றாக இருப்பதைவிட ஒரு பாறையாக இருப்பதே மேல் என நினைத்தான். மறு நிமிடமே தேவதை அவனை ஒரு பாறையாக மாற்றிவிட்டது.

ஒருநாள் சில சிற்பிகள் ஒரு பாறையைக் கண்டு "இந்தப் பாறையை வெட்டி எடுத்துப் போய் சிலைகள் செய்யலாம்" என்றனர். அந்தப் பாறைதான் தேவதையால் மாற்றப்பட்ட சிற்பி. அவர்கள் கூறியதைக் கேட்டு பாறையாகி நின்ற சிற்பி "தேவதையே! என்னைக் காப்பாற்று" என்று வேண்டினான். தேவதையும் அவன் முன் தோன்றி நீ சிற்பியாக இருப்பதே மேல் எனக்கூறி அவனை சிற்பியாக்கி விட்டுச் சென்றது. சிற்பியும் கண்டபடி ஆசைப்படுவதை விட்டுவிட்டு தன் பழைய தொழிலையே செய்து புகழும் பணமும் நிறையப் பெற்றான்.



# படிப்பு எதற்கு?

மங்களபுரி மன்னனுக்கு ஒருநாள் திடீரென்று ஒருவனுக்குப் படிப்பு எதற்கு என்ற சந்தேகம் ஏற்பட்டது. அவன் தன் தர்பாரில் உள்ளவர்களிடம் தன் சந்தேகத்தைத் தீர்த்து வைக்கும்படிக் கூறினான்.

படிப்பால் உயர்பதவியும் அதன் வாயிலாக பணத்தையும் சம்பாதிக்க முடியும் என்று ஆஸ்தான பண்டிதர் கூறினார். படிப்பால் புகழ் கிடைக்கும் என்றார் முதல மைச்சர். படிப்பால் கௌரவம் பெறலாம் என்றார் ஆஸ்தான கவிஞர். படித்தவர் எங்கு சென்றாலும் மரியாதை பெறுவார் என்றார் அரசாங்க புரோகிதர்.

மன்னனுக்கோ அவர்கள் கூறியது எல்லாம் திருப்தி அளிக்கவில்லை. அவன் முகம் சுளிப்பது கண்டு ஆஸ்தான விகடகவி எழுந்து "அரசே! எனக்கு இதற்கான விடை தெரியும். ஆனால் அதைச் சொன்னால் தாங்கள் என்மீது கோபம் கொள்வீர்களோ என்று தான் பயப்படுகிறேன்" என்றான்.

மன்னனும் "பயப்படாதே. தாராளமாகச் சொல். உன்னை ஒன்றும் செய்ய மாட்டேன்" என்று கூறவே விகடகவியும் "இந்த மாதிரி வீணான சந்தேகங்கள் வராமல் இருப்பதற்குப் படிப்பு தேவை. அடுத்து இதையெல்லாம் பிறரிடம் கேட்டு அவர்களை வாட்டாமல் இருக்கவும் படிப்பு தேவை" என்றான்.

இதைக் கேட்டு சபையில் இருந்த எல்லோரும் சிரித்து விட்டார்கள். மன்னனும் ஒரு நிமிடம் திகைத்தாலும் மறுநிமிடமே அவனும் எல்லோருடனும் சேர்ந்து சிரிக்கலானான்.





# வீரனின் அழகு

வீரபுரியின் மன்னன் வீரேந்தன் அவனது சேனாதிபதி சத்தியசேனன். ஒரு விஜயதசமியின் போது மன்னன் சேனாதிபதியுடனும் மற்றும் சில படைத்தலைவர்களோடும் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தான். அப்போது ஒருவன் குதிரை மீது சவாரி செய்தவாறே அவர்கள் இருந்த இடத்திற்கு வந்தான்.

அப்போது ஒருபடைத் தலைவன் "யார் வருவது? நண்பனா, பகைவானா?" என்று உரக்க குரலில் கேட்டான். வந்தவனும் "நான் நண்பனும் இல்லை. பகைவனும் இல்லை. ஒரு சர்வசாதாரணப் போர்வீரன்" என்றான். அப்போது மன்னன் அவனிடம் "உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான்.

வீரன் விரும்புவது வீரத்தை தானே என்றான் அந்த வீரன் சிரித்தவாறே. அது கேட்டு அவனை எல்லோரும் ஏற இறங்கப் பார்த்தார்கள். நல்ல உடல்கட்டு. சிறு தாடி. கையிலே பளபளவென மின்னும் கொடுவாள்.

மன்னனும் "அப்படியா! உன் வீரத்தைப் பரீட்சிக்க என் சேனாதிபதி சத்திய சேனன் தயார்" என்றதும் சத்திய சேனனும் எழுந்தான். ஆனால் கொடுவாள் வீரனோ "நான் சண்டை போட வரவில்லை. இதோ பார்த்தீர்களா என் கொடுவாளை, உங்களில் யாராவது ஒருவன் இதை எடுத்து என் கழுத்தில் ஓங்கி ஒரு அடி போட வேண்டும். ஆம் ஒரு அடிதான். அந்த ஒரு அடியில் என் கழுத்து வெட்டப்படாமல் இருக்கும். இன்றைக்குச் சரியாக ஒரு ஆண்டு கழிந்ததும் அந்த வீரன் என் இருப்பிடத்திற்கு வரவேண்டும். நான் இதே கொடு

-கி. வெங்கடாசலம்-

வாளால் அந்த வீரனின் கழுத்தில் ஒரு அடி கொடுப்பேன். அதற்கு அவன் தயாராக இருக்க வேண்டும்'' என்றான்.

அதைக் கேட்டு எல்லோரும் சிரித்தார்கள். அந்தக் கொடுவாளால் அவன் கழுத்தில் ஒரு அடி அடித்தால் அவன் கழுத்து வெட்டுப்பட்டு அவன் இறந்தல்லவா போய் விடுவான். இதென்ன பிதற்றல் என்று எண்ணினார்கள்.

அந்த வீரன் எல்லோரையும் பார்க்கவே சத்தியசேனன் முன் வந்து அவனது கொடுவாளை வாங்கி அவன் கழுத்தில் ஓங்கி ஒரு அடி அடித்தான். என்ன ஆச்சரியம்! அந்த வாள் அந்த வீரனின் கழுத்தில் நுழைந்து வெட்டவில்லை. வீரனின் கழுத்தில் காயம் கூட ஏற்படவில்லை. ஒரு துளி ரத்தம் கூட வெளியே வரவில்லை.

அந்த வீரன் புன்னகை புரிந்தவாறே சத்திய சேனனைப் பார்த்து "சரி, நீ அடுத்த ஆண்டு விஜயதசமி அன்று என் மலைக் கோட் டைக்கு வா'' என்று கூறிவிட்டுத் தன் கொடுவாளை எடுத்துக் கொண்டு போய் விட்டான்.

ஒரு ஆண்டு கழிந்து விஜய தசமி அன்று கொடுவாள் வீரனின் மலைக்கோட்டையில் இருக்க சத்திய சேனன் கிளம்பினான். மன்னனும் மற்றவர்களும் இனி அவன் எங்கே திரும்பி வரப்போகிறான்



என எண்ணி வருந்தி விடை கொடுத்தனர். சத்திய சேனனும் "நீங்கள் முடிவைப் பற்றி கவலைப்பட வேண்டாம். ஒரு வீரனுக்கு அழகு அவன்தான் சொன்ன சொல்லைக் காப்பதே. அப்படி நான் என் வாக்கைக் காக்காவிட்டால் அது நம் நாட்டிற்கே களங்கத்தை ஏற்படுத்தி விடும்'' என்று கூறிக் கிளம்பிச் சென்றான்.

அவன் காடுகளையும் மலைகளையும் கடந்து போய்க் கொண்டிருந்தான். சற்று இளைப்பாற அவன் ஒரு மரத்தின் கீழ் அமர்ந்தான். அப்போது ஒரு பெண் அலறும் குரல் கேட்டு அவன் எழுந்து அந்தக் குரல் வந்த திசையில் ஓடினான். சற்று தூரத்தில் சிலர் ஒரு அரச



குமாரியைத் துன்புறுத்திக் கொண் டிருந்தார்கள். சத்தியசேனன் தன் வாளை உருவி அவர்கள் மீது பாய்ந்து தாக்கவே அம்முரடர்கள் தாக்குதலைச் சமாளிக்க முடியா மல் பயந்து ஓடிவிட்டார்கள்.

சத்தியசேனன் அரசகுமாரியின் கட்டுகளை அவிழ்த்து அவளைப் பற்றி விசாரித்தான். அவளும் தன்னை அவன் காத்ததற்காக நன்றி கூறி "இதோ ஒரு மந்திர சக்தி வாய்ந்த மோதிரம். இதை நீங் கள் வைத்துக் கொண்டால் உங் களை எந்த சக்தி வாய்ந்த ஆயு தம் கொண்டும் யார் தாக்கினா லும் உங்களுக்கு எவ்வித ஆபத்தும் நேராது" என்றாள்.

சத்தியசேனனோ "நான் என் வீரத்தால் என்னைக் காத்துக் கொள்வேனே தவிர எந்த மாய மந்திரசக்தியின் உதவியையும் நாட மாட்டேன். இப்பொது ஒரு வீர னைச் சந்திக்கப் போய்க் கொண் டிருக்கிறேன். சென்ற ஆண்டில் அவன் சவால் விட்டபடி அவனது கொடுவாளால் அவன் கழுத்தில் ஒரு அடி கொடுத்தேன். அவன் கழுத்து அறுபட்டு இறக்கவில்லை. அவனுக்கு வாக்குக் கொடுத்தபடி இந்த ஆண்டு அதே போன்ற அடியை நான் அவனிடம் வாங்க வேண்டும். நான் என் பலத்தை நம்பித்தான் போவேன்! அதுதான் வீரனுக்கு அழகு. குறுக்குவழியைத் தேடக்கூடாது!" என்றான். பிறகு அவன் தன் உடைகளை அந்த மரத் தின் கீழ் வைத்து விட்டு அருகில் ஓடும் ஆற்றில் குளிக்கச் சென் றான்.

அரசகுமாரி அவன் போனதும் அவனது ஆடைகளை எடுத்துப் பார்த்தாள். ஆனால் அவன் குளித்து விட்டுத் திரும்பி வந்த போது அவள் அங்கே இருக்கவில்லை. சத்தியசேனன் தன் ஆடைகளை அணிந்து கொண்டு அவன் மலைக் கோட்டையை அடைந்தான் அப் போது அந்த வீரனும் தன் கொடு வாளுடன் தயாராக நின்று கொண் டிருந்தான். அவன் சத்திய சேன னிடம் "நீ சொன்ன சொல் தவ றாமல் வந்தது கண்டு சந்தோஷப்

படுகிறேன்'' என்றான்.

சத்திய சேனனும் ''ஆமாம் எல்லாம் சொன்னபடியேதான் நடக்க வேண்டும். நீயும் என் கழுத்தில் ஒரே ஒரு அடிதான் அடிக்க வேண்டும். தெரிந்ததா?'' என்றான். கொடுவாள் வீரனும் சிரித்தவாறே ''ஆமாம் ஒரே ஒரு அடிதான். மறு அடி வாங்க நீ எங்கே உயிருடன் இருக்கப் போகிறாய்?'' எனக் கூறித் தன் கொடுவாளை எடுத்து சத்திய சேனனின் கழுத்தில் ஓங்கி ஒரு அடி அடித்தான்.

கொடுவாள் சத்திய சேனனின் கழுத்தில் ஆழமாகப் பதிந்தாலும் ஒரு சொட்டு ரத்தம் கூட வெளி வரவில்லை. சத்தியசேனன் புன்னகை புரிந்து நின்று கொண்டிருந்தான். அது கண்டு ஆச்சரியப்பட்டது கொடுவாள் வீரன் மட்டும் அல்ல சத்தியசேனனும்தான். மறு நிமிடம் கொடுவாள் வீரன் ஆத்திரம் அடைந்து மறுபடியும் கொடுவாளை உயர்த்தி சத்திய சேனனை அடிக்கப் போனான்.

அப்போது சத்தியசேனன் தன் வாளை உருவிக் கொண்டு அவனை எதிர்த்து நின்றான். அப்போது மலைக் கோட்டை மன்னனும் அவன் மகளும் அங்கு வந்து அவர்களைத் தடுத்தார்கள். ஆம் சத்தியசேனன் அந்த அரசகுமாரியைத் தான் திருடர்களிடமிருந்து காப்பாற்றினான். அவளே அவனுக்குத் தெரியாமல் மந்திர மோதிரத்தை அவனது கவசத்தில் வைத்து விட்டாள் இதனை அவள் அப்போது தன் தந்தையிடம் கூறினாள்.

அதை கேட்ட கொடுவாள் வீரனும் ''நீங்கள் இருவரும் உங்கள் கடமைகளையே செய்தீர்கள்'' எனப் பாராட்டினான். மலைக் கோட்டை மன்னனும் சத்தியசேனனைப் பாராட்டியதோடு தன் மகளை அவனுக்கு மணம் செய்து வைத்தான். கொடுவாள் வீரனும் அத்தம்பதிகளை உளம்குளிர வாழ்த்தினான்.





# பூ! இவ்வளவுதானா?

செல்லப்பனுக்கு அரசாங்க வேலை கிடைத்தது. அதனால் அவன் தலைகால் தெரியாமல் துள்ளினான். அவனுக்கு மாதச் சம்பளம் ஐநூறு வராகன். அதனால்தான் அந்தத் துள்ளல்.

பொன்னப்பன் செல்லப்பனின் நண்பன். பள்ளியில் ஒன்றாகப் படித்தவன். அவன் அரசாங்க வேலைக்காக அலையாமல் சொந்தமாகக் காய்கறி வியாபாரம் செய்து வந்தான். அதில் அவன் குடும்பத்தை நடத்தப் போதிய பணம் கிடைத்து வந்தது.

அரசாங்க உத்தியோகம் பார்ப்பவன் என்ற காரணத்தால் செல்லப்பனுக்கு எல்லோரும் மரியாதை காட்டினார்கள். தெருவில் போனால் அவனை கைகூப்பி வணங்கினார்கள். அவனிடம் பேசும்போது பணிவுடன் பேசினார்கள். இதனால் செல்லப்பனின் கர்வம் அதிகரித்தது. அவன் தன் நண்பன் பொன்னப்பனை அலட்சியம் செய்ததோடு அவனோடு பேசுவதையும் நிறுத்தி விட்டான்.

பொன்னப்பனுக்கு இது மிகுந்த மனவேதனையை அளித்தது. முன்பெல்லாம் செல்லப்பன் எவ்வளவோ உதவிகளைப் பெற்றிருந்தும் இப்போது தன்னை முற்றிலும் மறந்து விட்டானே என்று வருத்தப்பட்டான். அவன் மனதில் செல்லப்பன் பார்க்கும் உத்தியாகம் எவ்வளவு உயர்ந்தது எனக் காண எண்ணம் எழுந்தது. எனவே அவன் பணிபுரியும் அலுவலகத்திற்குப் பொன்னப்பன் சென்றான்.

பொன்னப்பன் அங்கு சென்றபோது செல்லப்பனை யாரோ வாய்க்கு வந்தபடி திட்டிக் கொண்டிருந்தார். செல்லப்பன் பதில்

-காரை. குருமூர்த்தி-

பேசாமல் தலை குனிந்து கொண்டு எல்லாவற்றையும் பொறுமையுடன் சகித்துக் கொண்டிருந்தான். அப்போது பொன்னப்பன் வேறொரு அலுவலரிடம் "அவர் ஏன் செல்லப்பனை இப்படித் திட்டுகிறார்?" என்று கேட்டார். அவனும் "அவர் செல்லப்பனின் உயர் அதிகாரி. உயர் அதிகாரியை எதிர்த்துப் பேசினால் உத்தியோகம் போய் விடுமே. அதனால் எல்லாம் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும்" என்றான்.

அப்போது அதிகாரி "செல்லப்பா! ஏன் அறை சுத்தமாக இல்லை?" என்று கேட்கவே அவனும் "பெருக்குபவள் விடுப்பில் போயிருக்கிறாள் இன்று வரவில்லை" என்றான். "அவள் வராவிட்டால் நீ பெருக்குவதுதானே?" என்று அதிகாரி கத்தவே செல்லப்பன் துடப்பம் எடுத்து வந்து அறையைப் பெருக்கினான். அந்த அதிகாரி அவன் சரியாகவே பெருக்கவில்லை என்று திட்டிவிட்டு யாரையோ அழைத்துக் கொண்டு வரும்படி அவனிடம் கூறினார்.

செல்லப்பனும் போய் அந்த குறிப்பிட்ட பேர்வழியைத் தேடி அழைத்து வரக் கொஞ்சம் நேரம் பிடித்தது. அவ்வளவு நேரமா எடுத்துக் கொள்வது என்று அந்த அதிகாரி செல்லப்பனை திட்டினார். பொன்னப்பனுக்கு செல்லப்பன் ஒரு கொத்தடிமை போல இருக்கிறான் என்ற எண்ணமே ஏற்பட்டது. பூ! இவ்வளவு தானா செல்லப்பனின் மதிப்பு என மனதில் எண்ணிக் கொண்டான்.



தான் வேலை செய்யும் லட்சணத்தை அலுவலகத்திற்கு வந்து பொன்னப்பன் பார்த்துப் போனதை செல்லப்பன் கவனித்து விட்டான். அவன் மற்றவர்களிடம் தன்னைப் பற்றி மட்டமாகச் சொல்லி விடுவானோ என்று மாலையே அலுவலக வேலை முடிந்ததும் தன் வீட்டிற்குப் போய் தன் மனைவி மக்களை அழைத்துக் கொண்டு அவன் பொன்னப்பனின் வீட்டிற்குச் சென்றான்.

பொன்னப்பன் அப்போது தன் வீட்டாரிடம் அரசாங்க உத்தியோ

கம் பார்ப்பது ஒரு கொத்தடிமையை விடக் கேவலமானது என்பதை விளக்கிக் கொண்டிருந்தான். செல்லப்பன் வந்ததைக் கண்டதும் அவன் "சரியான வேளையில் தான் வந்தாய். இரண்டு நாட்களாக எங்கள் வீட்டு வேலைக்காரன் வரவில்லை. கொஞ்சம் இந்த அறையைப் பெருக்கி சுத்தம் செய். நீ கேட்கிறதை கொடுக்கிறேன்" என்றான். செல்லப்பனோ கோபம் கொண்டு "உன் வீடு தேடி வந்த என்னை உன் நண்பன் என்று கூடப்பாராமல் இப்படியா அவமானப் படுத்துகிறாய்?" என்று திட்டினான். செல்லப்பனின் மனைவியும் "இப்படியா என் கணவரை கேலி செய்வது? அவர் அரசாங்க உத்தியோகம் பார்ப்பவர்" என்றாள்.

செல்லப்பனும் அவனிடம் "நான் சொன்னது உனக்குத் தவறாகப் பட்டுவிட்டதா? அரசாங்க வேலை பார்ப்பவன் சூடு சொரணை இல்லாமல் எப்படி மாறுகிறான் என்பதை என் வீட்டவருக்குக் காட்டவே நான் இவ்வாறு கூறினேன். தினமும் அலுவலகத்தில் செல்லப்பன் தன் உயர் அதிகாரிக்கு பயந்து என்னென்ன வேலைகளைச் செய்ய வேண்டி வருகிறது என்றும் எப்படியெல்லாம் வசைவுகளைச் சகித்துக் கொள்கிறான் என்றும் கூறிக் கொண்டிருந்தேன். அங்கே அதிகாரி முன் காட்டும் பொறுமை அலுவலகம் விட்டு வந்ததும் போய் விடும் என நான் எதிர்பார்க்கவில்லை. இவன் அலுவலகத்தில் எப்படி இருந்தாலும் இன்றாவது என்னை மதித்து வந்தானே அது பற்றி மகிழ்ச்சி அடைகிறேன்" என்றான்.

செல்லப்பன் அதைக் கேட்டுத் தலை குனிந்து கொண்டான். செல்லப்பனின் மனைவியின் முகத்திலோ ஈயாடவில்லை. பொன்னப்பன் வீட்டவரோ புன்னகை புரிந்தனர்.



# இயற்கை விநோதங்கள்




## கங்காரு நாடு

ஆஸ்திரேலியாவைக் கங்காரு நாடு என்பர். இங்குள்ள கங்காருக்கள் தாவரம் உண்பவை. மாமிசம் சாப்பிடாதவை. இவை தம் குட்டிகளைத்தம் வயிற்றின் கீழ் உள்ள பைகளில் வைத்துப் பாதுகாக்கின்றன. இவற்றின் முன் இருகால்கள் பின்னங்கால்கள் இரண்டை விடக் குட்டையானவை. இதனால் இவை ஒரே தாவில் வெகுதூரம் வேகமாகப் போகும் இவற்றில் மிகப் பெரிய கங்காருவின் தலைஒரு ஆட்டின் தலை அளவுதானிருக்குமாம். முயலை விடச் சிறிய கங்காருகள் கூட இங்கு உள்ளனவாம்.

## முதலைக் கண்ணீர்!

மனிதன் வேறொரு மனிதனைக் கொன்று தின்றால் நரமாமிசம் சாப்பிடுபவன் என்கிறோம். ஆனால் மிருகங்களை இப்படிக் கூறுவதில்லை. முதலை ஒரு பிராணியைப் பிடித்துக் கொன்று தின்னும்போது கண்ணீர் வடிக்கிறது. இது இரக்கப்படுவதால் அல்ல. உண்மையில் அதன் கண்களிலிருந்து கண்ணீர் வெளிவிடுவது இல்லை. அதன் கண்களில் சேர்ந்து தங்கிவிடும் உப்புக்களை கண்ணீரில் கரைத்து வெளியேற்றுகிறது.






## பாம்பின் 'காதுகள்'

பாம்பாட்டியின் மகுடி இசை கேட்டு பாம்பு படம் விரித்து ஆடுவதாகத்தானே எல்லோரும் சொல்கிறார்கள். அது சரி இல்லை. பாம்பாட்டி தன் மகுடியை ஆட்டுவதைக் கண்டுதான் பாம்பு அதற்கு ஏற்ப ஆடுகிறது. அது இசையைக் கேட்டு அல்ல. பாம்பிற்குக் காதுகள் கிடையாது. ஆனால் பாம்பு தன் நாக்கை நீட்டி ஒலி அலைகளை உணரக்கூடியது. அவ்வளவுதான்.

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1992 மார்ச் மாத இதழில் வெளியிடப்படும்**



M. Natarajan



Devidas Kasbekar

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜனவரி 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 50/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

### நவம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: வேலையும் ஒரு விளையாட்டே

இரண்டாவது போட்டோ: விளையாட்டும் ஒரு வேலையே

பரிசு பெற்றவர்: பு. து. விசாலாட்சி, திருப்பத்தூர்-635 601

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

# பெற்றோரின் அக்கறை




அப்பா!


பயப்படாதே... அந்த புதரில் மைனாவின் கூடு இருக்கு. அதிலிருக்கும் குஞ்சை- நீ பிடிக்க வரேன்னு பெரிய மைனு நினேச்-சிருக்-கும்.


ஏன்னா, பெற்றோருக்குக் குடும்பத்தின்மேல் அக்கறை!
இங்க-ளுக்கு ஒரு லெட்டர், சார்.


என் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி...
அது என்ன, அப்பா?


நான் சொல்லிட்டு இருந்தேனில்லே... குழந்தைகளைப்பற்றிய அக்கறை. இருப்பதனுல் தான் பெற்றோர் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி எடுக்-கிறார்கள்!


ஆனால், நான் இன்ஷ்யூர் செய்துள்ளேன். எனக்கு ஏதாவது ஆனால்கூட, நீ கண்ணன் மற்றும் அம்மா எல்லோரும் வசதியுடன் இருக்க முடியும்!

AMBULIMAMA (Tamil) January 1992 Regd. No. M. 4863






தேங்காய்
இனிமை
மிட்டாய்க்குள்
கடித்தால் இன்பம்
வாய்க்குள்




nutrine
COOKIES





குழந்தைகள்
கோலாகலத்துடன் கூவுவர்
கோகாநாக குக்கீஸ்

